# தாய்மை அடையும் பருவத்திலே உங்கள் இருவருக்காக "உண்ண"வேண்டுமே!

## இப்போது தேவை அதிக ஊட்டச்சத்துள்ள

## புதிய காம்ப்ளான்® விட்டாமில்க்(T)

உங்கள் வயிற்றில் இன்னொரு புதிய உயிர். உங்கள் குழந்தை வளர்ந்து கொண்டிருக்கிறது. இந்த முக்கிய நேரத்தில் சிசுவின் வளர்ச்சிக்கும், உங்கள் உடல் நலத்திற்கும் மிகத் தேவை சரியான ஊட்டச் சத்துக்கள். எனவே காம்ப்ளான்-விட்டாமில்க் அருந்துங்கள். இது கர்ப்பிணிக்கும் பிறக்கப்போகும் குழந்தைக்கும் உணவில் பற்றாத கூடுதல் ஊட்டச்சத்தை அளிக்கிறது.

காம்ப்ளான்-விட்டாமில்க்கில் காம்ப்ளானின் எல்லா நற்பயன்களும் உள்ளன. மேலும் உங்களுக்கும் பிறக்கப் போகும் குழந்தைக்கும் தேவையான கீழ்க்காணும் கூடுதல் ஊட்டச் சத்துக்கள் அடங்கியுள்ளன.

- கூடுதல் ஃபோலிக் ஆஸிடு
- கூடுதல் பால்புரதம் (22.2 கிராம்)
- கூடுதல் வைட்டமின் A, $B_6$ மற்றும் C
- கூடுதல் இரும்புச்சத்து, அயோடின், கால்ஷியம், ஸிங்க் மற்றும் மக்னீஷியம்.

தினமும் 2 கப்புகள்




ரெகுலர் * சாக்லேட்

உடல் நலத்தின் உறைவிடம் க்ளாக்ஸோ

GL/V/P/90 TAM





தமது கண்டுபிடிப்புடன் காஜா நசிமுதின்.

# சின்னதாக ஒரு ஜிம்பூம்பா!

பரீட்சைக்காக ராத்திரி படுத்த படியே படித்து விட்டுத் தூக்கம் வந்ததும் எழுந்து போய் லைட்டை அணைக்க வேண்டுமே என்று சோம்பலாக இருக்கிறதா? எல்லா வேலைகளும் முடிந்து 'அப்பாடா' என்று படுக்கும் போது, 'சமையலறை லைட்டை அணைக்கவில்லையே!' என்ற எரிச்சல் வருகிறதா? "கவலையை விடுங்கள்!" என்கிறார் நெல்லையில் இருக்கிற காஜா நசிமுதின் என்கிற இருபத்தொன்பது வயது இளைஞர்.

ட்ரான்ஸிஸ்டர் சைஸில் சின்னதாய், சிவப்பு நிறத்திலிருக்கிற 'மல்டி — கண்ட்ரோலர்' என்கிற இயந்திரத்தை இவர் இதற்காகவே கண்டுபிடித்திருக்கிறார். அலாரம் டைம் — பீஸ்"டன் சில ஒயர் வேலைகள் — இது தான் இவரது 'மல்டி — கண்ட்ரோலர்.'

"விளக்கை அணைக்க என்றில்லை; காலை ஐந்து மணிக்கு அலாரம் அடித்தால் அது அடங்கின பிறகு கூடச் சில் சமயம் நிம்மதியாகத் தூங்கி விடுவோம். மல்டி — கண்ட்ரோலர் நம்மைத்தூங்கவிடுவதில்லை! அத்தனை லைட்டுகளையும் 'ஆன்' செய்து விடுகிறது. அதுபோல் நாம் வெளியூருக்குப் போனால் வீட்டில் ஆள் இருக்கிற மாதிரியே ஆறு மணிக்கு 'லைட்' எரியும். ட்ரான்ஸிஸ்டர் பாடும். டீ.வி. ஓடும். ஒன்பது, பத்து மணிக்கு அணைந்து விடும்!

"கிட்டத்தட்ட ஒரு ரிமோட் — கண்ட்ரோல் சிஸ்டம் தான் இது" என்கிறார் காஜா நசிமுதின். அஞ்சல் வழிக் கல்வியில் எம்.ஏ. பொலிடிகல் சயின்ஸ் படிக்கிறார். என்ஜினீயரிங் படிக்க நிறைய ஆசைப் பட்டிருக்கிறார். அது கனவாக மட்டுமே போக, பி.ஏ. சரித்திரம் படித்திருக்கிறார். ஆனாலும் என்ஜினீயரிங் ஆசை விடவில்லை: மல்டி — கண்ட்ரோலர் உருவாயிற்று. "சின்ன வயசிலிருந்தே ஏதாவது செய்யணும்னு ஓர் ஆசை. SHY என்கிற கையெழுத்துப் பிரதியையும் நடத்துகிறேன். இலக்கியத்தில் நிறைய ஈடுபாடு உண்டு!" என்று சொல்லும் இவர், அறை முழுக்க எஸ்.டி. காலரிட்ஜ், தாமஸ் ஹார்டி என்று இலக்கியப் புத்தகங்களை வரிசையாக அடுக்கி வைத்திருக்கிறார். படுக்கைக்குப் பக்கத்திலேயே மல்டி — கண்ட்ரோலரை வைத்திருக்கிறார். "மின்விசிறியின் வேகத்தைக் கூட இதைக் கொண்டு எழுந்து போகாமலேயே ரெகுலேட் செய்து கொள்ளலாம்."

இப்போது டிரான்ஸிஸ்டர் சைஸில் இருக்கும் மல்டி — கண்ட்ரோலரை இன்னும் சின்னதாக்கிக் கொண்டிருக்கிறார். "டீ.வியின் ரிமோட் கண்ட்ரோலுக்காக ஆயிரம் ரூபாய் வரை கொடுத்து வாங்குவதை விட, இருநூறு ரூபாய் கொடுத்து மல்டி — கண்ட்ரோலரை வாங்கி வைத்துக் கொள்வது சிக்கனம். இதற்காகத் தேசிய அளவில் நெல்லையில் நடந்த சயன்ஸ் எக்ஸிபிஷனில் பரிசு பெற்றிருக்கிறார்.

இதை வாசிக்கும் பெண்கள், "போய் வாங்கிட்டு வாங்கன்னா வாங்கிட்டு வாங்களேன்" என்று கணவன்மார்களை விரட்ட வேண்டாம். காஜா நசிமுதின் பரிசோதனை முறையில்தான் தயாரித்துள்ளாரே தவிர வியாபார ரீதியில் உற்பத்தி செய்ய இன்னும் யாரும் முன் வரவில்லை. எதிர்பார்ப்புடன் இருக்கிறார்.



பேட்டி: **தமயந்தி.**

புகைப்படம்: **சுந்தர்.**

**யோசனை தெரிவித்த வாசகர்: தோ, திருச்சி — 18.**



# எதிர்காலத் திட்டம் என்ன?

## —கலைஞர் சிறப்புப் பேட்டி

**முதுகில் குத்தப்பட்ட அதிர்ச்சியும், வலியும் ஏற்பட்டிருந்தாலும் கூட, உடனடியாகத் தமது இயல்பான நிலைக்குத் திரும்பி வந்துவிட்டார் தி. மு. க. தலைவர். ஆசிரியர் கி. ராஜேந்திரனும் துணையாசிரியர் இளங்கோவனும் கோபாலபுரத்திலுள்ள அவரது இல்லத்தில் அவரைச் சந்தித்துப் பேட்டி கண்ட போது, அவருடைய வழக்கமான உற்சாகமும், சமயம் கிடைக்கும் போது கேள்வியாளரையே நாசூக்காகத் திருப்பித் தாக்குகிற பாங்கும் சிறிதும் குறைந்ததாகவே தெரியவில்லை...**

கல்கி: தி. மு. க. அரசு டிஸ்மிஸ் செய்யப்பட்டதென்பதை, நீங்கள் எதன் பொருட்டுக் கொடுத்த விலையாகக் கருதுகிறீர்கள்?

கலைஞர் மு. கருணாநிதி: 76 இல் கலைக்கப்பட்டதென்பது, நாங்கள் எமர்ஜென்சியை எதிர்த்ததற்காகக் கொடுக்கப்பட்ட விலை. ஆனால், இந்தக் கலைப்பிற்கு எந்தவிதமான காரணமும் இல்லை. சந்திரசேகர் தமது பதவியைத் தாற்காலிகமாகக் காப்பாற்றிக் கொள்வதற்காகச் செய்த காரியம் இது. எனவே, நாங்கள் இதற்கு விலை கொடுத்ததாகச் சொல்ல முடியாது.

கல்கி: விடுதலைப் புலிகள் மேல் நீங்கள் காட்டுகிற அனுதாபம்தான் காரணம் — அதனால் ஏற்பட்டுவிட்ட பிரச்னைகள் தான் ஆட்சிக் கலைப்புக்குக் காரணம் என்று அவர்கள் சொல்கிறார்களே?

கலைஞர்: 83 — லிருந்து அவர்கள் காட்டாத அனுதாபத்தையா நான் காட்டி விட்டேன்!

கல்கி: நீங்கள் அதிகபட்சம் காட்டிக் கொண்டிருக்கிறீர்கள்.....

கலைஞர்: கிடையவே கிடையாது. அவர்கள்தான் கோடிக் கணக்கான ரூபாய்க்கு ஆயுதம் கொடுத்தார்கள். அதன்னியில் மாநில அரசில் ஆயுத சப்ளைக்குப் பணம் கொடுத்தார்கள். தமிழகத்தில் போராளிக் குழுக்களின் 31 கேம்ப்கள் இருந்தன. அவற்றில் எல்லாவிதமான ராணுவப்

பயிற்சிகளும் நடந்தன. அந்தத் தீவிரவாதிகள் வைத்த வெடிகுண்டால்தான் சென்னை விமான நிலையத்தில் உள் நாட்டுப் பயணிகள், வெளி நாட்டுப் பயணிகள், அங்கு வேலை செய்த சிப்பந்திகள் என்று மொத்தம் நாற்பது பேர் உயிரிழந்தார்கள். இதெல்லாம் தி. மு. க. ஆட்சிக் காலத்திலா நடந்தன? இலங்கைப் போராளிகள் இலங்கையில் தங்கள் உரிமைகளுக்காகப் போராடிக் கொண்டிருப்பதன பேரில் எங்களுக்கு அனுதாபம் உண்டு. அதே நேரத்தில் தமிழ்நாட்டை அவர்கள் வன்முறைக் களமாக ஆக்குவதை அனுமதிக்க முடியாது. இதுதான் தி. மு. க. வின் திட்டவட்டமான கருத்து. அதோடு, அவர்களுக்குள் நடக்கும் சகோதர யுத்தத்தையும் நிறுத்த வேண்டும் என்றும் சொல்லிக் கொண்டிருக்கிறோம். இவை மாத்திரமல்ல; தி. மு. க. ஆட்சியிலிருந்த போதும் சரி, ஆட்சியிலில்லாத போதும் சரி, ஒவ்வொரு பிரதமரையும் கலந்தாலோசித்து வந்திருக்கிறோம். முன்பு இந்திரா காந்தி அம்மையார், பிரதமராக இருந்தபோது நாங்கள்எதிர்க்கட்சியில் இருந்தோம். அப்போதும் அவர் கருத்தறிந்து செயல்பட்டிருக்கிறோம். அதன் பிறகு நான் இங்கு முதல்வராக இருந்தபோது பிரதமர் ராஜீவ் காந்தியிடமும் பேசினோம். அவர் புலிகளோடு பேச்சு வார்த்தை நடத்தச் சொன்னார். அது பற்றி முரசொலி மாறனுக்குக் கடிதம் கூட எழுதியிருக்கிறார். பேச்சு வார்த்தைக்கான நாளும் குறிக்கப்பட்டது. இதற்கிடையில். மார்ச் 25 இல் சட்டமன்றத்தில் ஏற்பட்ட சம்பவத்தின் காரணமாக — அவருக்கு ஏற்பட்ட அரசியல் அழுத்தம் காரணமாக அதை அப்படியே நிறுத்தி வைத்து விட்டார். அதன் பிறகு வி.பி. சிங் பிரதமரானார். அப்போது நான் வி.பி. சிங்கிடம் மாத்திரம் ஆலோசனை செய்யவில்லை; வி.பி. சிங், ஜோதிபாசு, அத்வானி, வாஜ்பாய், இந்திரஜித் குப்தா, இ.எம்.எஸ். நம்பூதிரி பாட், சிட்டபாசு ஆகிய அனைவரிடமும் பிரதமர் வீட்டில் கலந்து பேசினோம்.

போராளிகளாகவே இருந்தாலும் அவர்கள் இலங்கையில் கையொடிந்து, காலொடிந்து வருகிற போது, நாம் அவர்களை அப்படியே கடலில் தூக்கிப் போட்டுவிட முடியாது என்பதால், நாம் அவர்களுக்குச் சிகிச்சையளிப்பதில் தவறில்லை என்று முடிவு செய்தோம். 87 — லேயே இங்கிருந்த முகாம்கள் கலைக்கப்பட்டு விட்டன — ஈ.பி. ஆர்.எல்.எஃப் குழுவினர் இலங்கை அரசுக்கு ஆதரவாகச் சென்று விட்டார்கள்; விடுதலைப் புலிகள் இலங்கைக்குப் போராடுவதற்காகச் சென்றுவிட்டார்கள் என்ற நிலையிலும் இங்கு ஒரு கணக்கெடுத்தோம். அதில் ஏழாயிரம் பேர் இங்கே இருப்பதாகச் சொன்னார்கள். அவர்களெல்லாம் அகதிகளாக வந்த அப்பாவித் தமிழர்கள்; கொஞ்சம் வசதி மிக்கவர்கள் தனித் தனியாக இங்கே வீடெடுத்துத் தங்கிக் கொண்டிருந்தார்கள். அதன்னியில் சில போராளிகளும் உலவிக் கொண்டிருக்கிறார்கள் என்று உணரத்தலைப்பட்ட நேரத்தில், சந்திரசேகர் பிரதமரானார்.

அவரிடமும் சென்று பேசினேன். 'அவர்களெல்லாம் ஏன் வெளியில் உலவிக் கொண்டிருக்கிறார்கள்?' என்று கேட்டார். 'அவர்கள் மீது என்ன குற்றம் சாட்டி காவலில் வைப்பது? வழக்குப் போட்டால் குற்றம் ஏதும் ருசுவாகவில்லை என்று விடுதலை பெற்றுவிடுகிறார்கள். விசாரணை இன்றிக் காவலில் வைக்கலாம் என்றாலோ, என். எஸ்.ஏ.வில் கைது செய்து நீதிமன்றத்திற்குக் கொண்டு சென்றால், அவர்கள் இந்த தேசத்தவர்கள் இல்லை என்பதால் அவர்களுக்குத் தேசியப் பாதுகாப்புச் சட்டம் பொருந்தாது என்று சொல்லி நீதிபதி விடுதலை செய்து விடுகிறார், என்ன செய்யலாம்?' என்று நான் கேட்டேன். 'அப்படியானால் அவர்களையெல்லாம் ஸ்பெஷல் கேம்ப்களில் வையுங்கள். அதற்கு அவர்கள் மறுத்தால் இலங்கைக்கே திருப்பியனுப்பி விடுவதாக மிரட்டுங்கள்' என்றார். இதுதான் சந்திரசேகர் என்னிடம் சொன்ன செய்தி! இதை ரகசியம் என்று ஏற்பதாயிருந்தாலும் இதை அதிகாரிகளிடம் சொல்லாமல் எப்படி நடவடிக்கை எடுக்க முடியும்? அப்படிச் சொல்லித்தான் தனித்தனிப் போராளிக் குழுக்களையும் வேலூர், புதுக்கோட்டை என்று தனித்தனி ஸ்பெஷல் கேம்ப்களில் வைத்தோம். போலீசார் இவ்வாறு மிரட்டி நடவடிக்கை எடுக்க ஆரம்பித்ததுமே விஷயம் விடுதலைப் புலிகளுக்குத் தெரியாமல் எப்படி இருக்க முடியும்? ஆக, ரகசியத்தை வெளியிட்டு விட்டோம் என்பது எவ்வளவு அபத்தம்! போகட்டும், போராளிக் குழுக்களின் கேம்ப்கள் இருப்பதாகச் சொன்னார்களே — இப்போதுதான்



எங்கள் ஆட்சி கலைக்கப்பட்டு விட்டதே — எத்தனை கேம்ப்களைக் கண்டு பிடித்திருக்கிறார்கள்? நாம் கவலைப்படுவது போராளிகளைப்பற்றி மட்டுமல்ல; இலங்கையில் உள்ள அப்பாவித் தமிழர்கள் குறித்துத் தான் அதிகம் வருந்துகிறோம். இப்போது கூட இலங்கைத் தமிழர் பிரச்னைக்கு ஒரு நிரந்தரமான தீர்வு காணப்படுமானால் எங்களுக்கு மிகவும் மகிழ்ச்சிதான்.

கல்கி: தீவிரவாதிகளிடம் அனுதாபம் காட்டியவர் என்பதால் வரப்போகிற தேர்தலில் உங்களை ஒரு தேச விரோதியாகச் சித்திரித்துப் பிரசாரம் செய்வார்களே?

கலைஞர்: பரூக் அப்துல்லாவைக் கூடத் தான் தேசவிரோதி என்றார்கள். இப்போது ராஜீவ் காந்தியும் பரூக் அப்துல்லாவும் ஒரே ஹெலிக்காப்டரில் பறந்து வந்து ஜெயலலிதாவைச் சந்திக்கவில்லையா? தேச பக்தி என்பது நேரு குடும்பத்திற்கு மாத்திரமே சொந்தமான ஒன்றா என்ன! தேச பக்தியை ராஜீவ் காந்தி மட்டுமேதான் குத்தகைக்கு எடுத்திருக்கிறாரா என்ன!

கல்கி: உங்களை அப்படிச் சித்திரிப்பதற்கு ஒரு வாய்ப்பு இருக்கிறதென்பதால் நீங்கள் இன்னும் கொஞ்சம் ஜாக்கிரதையாக இருந்திருக்கலாமோ என்று தோன்றுகிறது?

கலைஞர்: எப்படியிருந்தாலும் பத்துப் பேர் ஆதரவு என்கிற எலும்புத் துண்டைக் காப்பாற்றிக் கொள்வதற்காகச் சந்திரசேகர் எதையுமே செய்வார். அதற்குக் காரணங்களே தேவையில்லை. பதினோராம் தேதி எனக்கெழுதிய கடிதத்தில் வன்முறைக் கலவரங்கள் உள்ள மாநில லிஸ்டில் தமிழ் நாடு இல்லை என்கிறார் சந்திரசேகர். பதினைந்தாம் தேதி தி. மு. க. அரசைக் கலைக்கும் திட்டம் ஏதும் இல்லை என்று பேட்டி கொடுக்கிறார். ஆனால் பார்லிமெண்டில் பேசும்போதோ அவர் விடுதலைப்புலிகள் தொடர்பாகச் சொன்ன ஒரு செய்தியை — நான் முன்பு சொன்ன அந்த 'ரகசியம்' தான் — நான் புலிகளுக்கு வெளியிட்டதாகப் பொய் சொல்கிறார். உடனே ராஜ்ய சபாவில் கலாட்டா நடக்கிறது. பின்னர் எதிர்க் கட்சித் தலைவர்கள் கேட்ட போது, வேலூரில் கைது செய்யப்பட்ட உல்ஃபாவைச்சேர்ந்தஒருவன், தமிழ்நாட்டில் உல்ஃபா கேம்ப் இருப்பதாகப் போலீஸாரிடம் எழுதிக் கொடுத்ததாகச் சொல்லியிருக்கிறார். அந்த உல்ஃபா வீரனைக் கைது செய்து கொடுத்ததே நாங்கள்தான்! போலீஸ்காரர்கள் எதுவேண்டுமானாலும் எழுதி வாங்கியிருக்கலாமே என்று எதிர்க் கட்சித் தலைவர்கள் கேட்டிருக்கிறார்கள். அதற்குச் 'சரிசரி, இதோடு விட்டுவிடுங்கள்; கலைக்க மாட்டேன்' என்று சொல்லியிருக்கிறார். அதன் பிறகு கலைத்ததற்குக் காரணம் என்ன? மக்களைக் கவருகிற திட்டங்களைத் தி. மு. க. அரசு பட்ஜெட்டில் அறிவிப்பதற்கு முன் — 2 ஆம் தேதிக்கு முன் கலைக்கப்படாவிட்டால் 5 ஆம் தேதி ஆதரவை வாபஸ் வாங்கிக் கொள்வோம் என்ற இவர்களின் நெருக்குதல் தானே தவிர வேறொன்றுமில்லை.

கல்கி: உங்கள் ஆட்சி டிஸ்மிஸ் செய்யப்பட்டதைக் கண்டித்து எழுதும் பத்திரிகைகள் கூட விடுதலைப்புலிகள் விஷயத்தில் நீங்கள் நடந்து கொண்ட விதம் பற்றி உங்களைக் குறை சொல்லித்தான் எழுதியிருக்கின்றன!

கலைஞர்: அவர்கள் புரியாமல் எழுதினால் நான் என்ன செய்ய முடியும்? மூன்று மாவட்டங்கள் விடுதலைப்புலிகளின் கட்டுப்பாட்டில்தான் இருக்கின்றன. அரசாங்கத்தின் கட்டுப்பாட்டில் இல்லையென்று எழுதினார்களே, உண்மையா அது?

கல்கி: பெட்ரோல், டீசல் போன்றவற்றைக் கடத்திக் கொண்டிருந்தார்கள் என்பது உண்மைதானே?

கலைஞர்: கடத்தல் எங்குதான் நடக்கவில்லை? அண்மையில் கூட பம்பாயிலும் கல்கத்தாவிலும் இரண்டு கோடி ரூபாய் மதிப்புள்ள கடத்தல் தங்கம் பிடிபட்டதாகச் செய்திகள் வந்துள்ளனவே.....

கல்கி: தங்கம், போதைப் பொருள் போன்றவற்றைக் கடத்துவதற்கும் பெட்ரோல், டீசல் போன்றவை கடத்தப்படுவதற்கும் வித்தியாசம் இருக்கிறதல்லவா?

கலைஞர்: என்ன வித்தியாசம்? அவற்றைவிடவும் இது விலை மதிப்புள்ளதா என்ன?

கல்கி: அப்படியில்லை. அவற்றின் அளவு குறைவு. அதனால் சுலபம். இது அப்படியல்லவே! பெரிய பெரிய டின்களிலல்லவா எடுத்துச் செல்ல வேண்டும்?

கலைஞர்: அப்படிக் கடத்தும் போது பிடிபட்டிருக்கிறார்களே! கடற்கரையோரங்களில் கடத்தல் என்பது நமக்கெல்லாம் முன்பிருந்தே நடந்து கொண்டிருக்கிற விஷயம். இலங்கைக்குப் பெட்ரோல் கடத்தியிருக்கலாம்; இல்லையென்று சொல்லவில்லை. ஆனால், அவர்களில் பலர் பிடிபட்டிருக்கிறார்கள். இந்தியாவில் தினந்தோறும் நடந்து கொண்டிருக்கிற தங்கம், போதைப் பொருள் கடத்தல்களுக்காக ஆட்சியைக்



"என்னங்க, மேலேயே பார்த்துக்கிட்டிருக்கீங்க?"

"ஏவுகணைங்களை ராக்கெட் வெடி மாதிரி மாத்தி மாத்தி விட்டுக்கிட்டிருக்காங்களே, ஏதாவது ஒண்ணு வழி தவறி இந்தப் பக்கம் வந்திடுச்சுன்னா... பயமாயிருக்குங்க!"

# BALU JEWELLERS ACCEPT FIXED DEPOSITS

| | | |
|---|---|---|
| Period | : | 1 year and above |
| Rate of Interest | : | 18 % per annum |
| Amount of Deposit | : | Rs. 5000/- and above |
| Interest payable | : | Monthly |

**For details call on :**



## Balu Jewellers

**GROUP CONCERNS**

**DIAMOND, GOLD & SILVER**

72, USMAN ROAD, T. NAGAR,
MADRAS — 600 017
PHONE : 441812, 441741

**Invest for your golden future.**



"வாயைத் திறக்க மாட்டேங்கிறான் ராஸ்கல்! யோவ்...302! இவனைச் செமத்தியா கவனி!"

"வரும்போதே கவனிச்சுட்டேன் சார்! அம்பதுதான் தேறிச்சு!"

— அ. நவ்சாத்.

கலைக்க வேண்டுமானால் மத்திய அரசை யார் வந்து கலைப்பது? கூடத்தலுக்காக ஓர் அரசைக் கலைப்பதாக இருந்தால் எந்த அரசுமே ஆட்சியிலிருக்க முடியாது.

கல்கி: அரசியல் சாசனத்தின் 356 வது பிரிவு சில சமயங்களில் அநியாயத்திற்குப் பயன்படுத்தப்படுகிறது என்றாலும் அதை முழுமையாக நீக்குவது சரியானது தானா?

கலைஞர்: திடீரென்று, எந்த விதமான முகாந்திரமுமில்லாமல் இது மாதிரி ஓர் ஆட்சியைக் கலைக்கலாம் என்று மத்திய அரசு ஆணவம் கொள்வது தடுக்கப்பட்டாக வேண்டும். அதற்குப் பெரிய அளவில் சிந்தித்து, நல்ல முடிவுக்கு வந்து ஒரு மாற்றுச் செய்துதான் ஆக வேண்டும்.

கல்கி: தி. மு. க. வின் எதிர்காலத் திட்டம் என்ன?

கலைஞர்: அண்மையில் வரப் போவது தேர்தல்தான். அதற்கு நாங்கள் எப்போதும் தயாராகவே இருக்கிறோம்.

கல்கி: வரப்போகிற தேர்தலில் உங்களை ஒரு தேச விரோதி என்று சித்திரிப்பதில் தான் எதிர்க்கட்சியினர் மிகவும் மும்முரமாக இருப்பார்கள். அதை நீங்கள் எப்படிச் சமாளிக்கப் போகிறீர்கள்?

கலைஞர்: நீங்கள்தான் ரொம்பவும் கவலைப்படுகிறீர்கள். (சிரிக்கிறார்) நீங்களே அதைப் பெரிதாகப் போடுவீர்கள் போல் இருக்கிறதே! (மீண்டும் சிரிக்கிறார்) கல்கி பத்திரிகையே என்னை அப்படித்தான் நினைத்துக் கொண்டிருக்கிறது. 'நல்லாட்சி நடக்கவில்லை' என்று நீங்களே பலதடவை எழுதியிருக்கிறீர்களே!

கல்கி: நாங்கள் உங்களைப் பல முறை பாராட்டியும் எழுதியிருக்கிறோம்!

கலைஞர்: பாராட்டி எழுதுவதென்பது வேறு. ஒரே வரியில், 'நல்லாட்சி நடக்கவில்லை; நல்லாட்சி இருந்தாலல்லவா நல்ல எதிர்க்கட்சி இருக்கும்' என்று எழுதியிருக்கிறீர்களே!

கல்கி: நாங்கள் ஒவ்வொரு விஷயத்தையும் தனித்தனியாகப் பார்த்து, அது தொடர்பாகத்தான் விமர்சிக்கிறோம். பொதுப் படையாக அல்ல.

கலைஞர்: நான் வருத்தமோ, கோபமோ கொள்ளவில்லை (சிரிக்கிறார்). ஏனெனில், நானும் ஓர் எழுத்தாளன்; பத்திரிகையாளன். என்னால் பதில் சொல்ல முடியும்!

கல்கி: தேசிய முன்னணியில் உங்கள் பங்கு இனி என்னவாக இருக்கும்?

கலைஞர்: அது எப்போதும் போல் இருக்கும். அதில் எந்தவிதமான மாற்றமும் இல்லை.

கல்கி: இனி விடுதலைப்புலிகள் விஷயத்தில் உங்கள் சிந்தனையில் ஏதேனும் மாற்றங்கள் உண்டா?

கலைஞர்: எந்தப் போராளிக் குழுவாக இருந்தாலும் அவர்கள் தமிழகத்தை ஒரு வன்முறைக் களமாக ஆக்கக் கூடாது. அவர்கள் தமிழக போலீஸாருக்குச் சவால் விடுவது போன்ற காரியங்களை நான் வன்மையாகக் கண்டித்திருக்கிறேன். அதில் எந்தவிதமான மாற்றமும் கிடையாது. முன்பு ஈ.பி.ஆர்.எல். எஃப் பத்பநாபா குழுவினரை இலங்கையிலிருந்து கப்பலேற்றி இந்தியாவுக்கு அழைத்து வரும்போது — கப்பல் பாதி வழி வந்த பிறகுதான் அந்த விஷயமே எனக்குத் தெரிவிக்கப்பட்டது — என்னிடம் சொன்னார்கள். அப்போது நான் அவர்களை இங்கே கொண்டு வந்தால் விடுதலைப் புலிகளுக்கும் அவர்களுக்கும் பிரச்னை வரும்; அதனால் அவர்களை அந்தமானில்கொண்டு போய் வைத்து விடுங்கள் என்று சொன்னேன். கப்பல் ஏற்கெனவே ரொம்பதூரம் வந்து விட்டதால் இனியொன்றும் செய்ய முடியாது என்று ஒரிஸாவுக்குக் கொண்டு சென்றார்கள். அங்கிருந்து தமிழகத்துக்கு வந்து விடுவார்கள் என்றேன். அப்படித் தான் நடந்தது. மற்றவர்கள் தமிழகத்துக்கு வந்தபோது, பத்மநாபாவும் சிலரும் டெல்லிக்குச் சென்று விட்டார்கள். அவர்கள் டெல்லியில்தான் இருக்கிறார்கள் என்று நினைத்துக் கொண்டிருந்த போது, திடீரென்று விமானத்தில் சென்னைக்கு வந்ததுதான் பிரச்னையாகப் போய்விட்டது. அவர்களைத் தொடர்ந்து கவனித்து வந்த புலிகள் கொலை செய்துவிட்டார்கள்.

கல்கி: புலிகளால் அவர்களைக் கவனிக்க முடிந்திருக்கிறதென்றால் நமது புலனாய்வுத் துறையால் கவனித்திருக்க முடியாதா?

கலைஞர்: அவர்கள் டெல்லியில் இருப்பதாகத்தானே நினைத்துக்கொண்டிருந்தோம். அவர்கள் நமக்கு ஒரு தகவலும் கொடுக்காமல், திடீரென்று விமானத்தில் வந்தது தான் பாதுகாப்புக் கொடுக்க முடியாமல் செய்துவிட்டது. சொல்லப் போனால் சபாரத்தினத்திற்கு அடுத்தபடியாக என்னிடம் அதிகம் பழகியவர் பத்மநாபாதான். பிரபா


இயற்கையான ஜூஸ்கள்,
இயற்கையான உணவுகள்
அத்துடன் இயற்கையான
உட்பொருட்களுடன்
கொசு விரட்டி!


கொசுக்களை விரட்டிட
ஆரோக்கியமான
வழி... டார்டாய்ஸ்
கொசுவர்த்திச் சுருள்.


ஏம்பா, கொசுக்களை
விரட்ட கத்தி எதுக்கு?
வத்தி போதுமே!
டார்டாய்ஸ்
கொசுவத்தியால்
பாதுகாப்பாய்
விரட்டலாமே!


பாதுகாப்பாகவும்,
ஆற்றலுடனும்
கொசுக்களை சுழற்றி
அடிக்க... டார்டாய்ஸ்
கொசுவர்த்திச் சுருள்.




டார்டாய்ஸ் கொசு
வர்த்திச் சுருள்
தயாரிப்பாளர் : பாம்பே கெமிக்கல்ஸ் லிமிடெட்
தமிழ்நாடு மற்றும் பாண்டிச்சேரிக்கு விநியோகஸ்தர்கள்: சாந்திலால் பிரதர்ஸ், 7, காசி செட்டி லேன்: 2வது மாடி, சென்னை — 600 079. ஃபோன்: 569986/560414/569826.

கரனை ஐந்தாறு முறை தான் சந்தித்திருக்கிறேன்.

*கல்கி:* போராளிகளைச் சமாளிப்பதற்காக மத்திய அரசிடம் நீங்கள் பட்டாளம் கேட்டீர்களே, என்னவாயிற்று?

*கலைஞர்:* கொடுக்கவில்லை. ஆனால் இப்போது கொடுத்திருக்கிறார்கள்! ஆட்சிக் கலைப்பால் ஏற்படக் கூடிய கலவரங்களை ஒடுக்கவாம்!

*கல்கி:* நீங்கள் கேட்டபோது கொடுக்காததற்கு ஏதாவது காரணம் சொன்னார்களா?

*கலைஞர்:* இல்லை. அப்படிக் கொடுத்திருந்தால் சட்டம் – ஒழுங்கு கெட்டுவிட்டதென்றெல்லாம் இப்போது ஆட்சிக் கலைப்புக்குக் கற்பனையான காரணங்களைக் கூடக் கூற முடியாதே! அதோடு கடல் பாதுகாப்பு முழுமையும் மத்திய அரசின் பொறுப்பைச் சேர்ந்தது. கள்ளக் கடத்தல் போன்றவற்றையெல்லாம் பிடித்துக் கொடுக்க வேண்டியதும் அவர்கள் பொறுப்புத்தான்! அப்படித்தான் இப்போதைய கடற்படைத் தளபதி ராம்தாஸ் முன்பு நூறு பேரைப் பிடித்துக் கொடுத்ததாகவும், நாங்கள் விட்டு விட்டதாகவும் சொன்னார். அவர்களில் ஐம்பத்தாறு பேர் அகதிகள். மீதமிருந்தவர்கள் படகுகளை ஓட்டிக் கொண்டு வந்தவர்கள். அவர்களை விடாமல் என்ன செய்வது?

*கல்கி:* தி. மு. க. வின் எதிர் காலம் எப்படியிருக்குமென்று நினைக்கிறீர்கள்?

*கலைஞர்:* தி. மு. க. வின் எதிர்காலமென்பது தேர்தல்களை வைத்து நிர்ணயிக்கப்படுவதல்ல. அதனால் அது எப்போதுமே நன்றாகத்தான் இருக்கும்.

*கல்கி:* உங்களது இலக்கியப் பணி – எழுத்துப் பணி எப்படியிருக்கும்?

*கலைஞர்:* நேரமும் வாய்ப்பும் கிடைக்கிறபோது அது தொடர்ந்து கொண்டுதான் இருக்கும்.

*கல்கி:* நேரம் கிடைக்கும் என்கிறீர்களா? கிடைக்காது என்கிறீர்களா?

*கலைஞர்:* உங்கள் பிரார்த்தனை என்னவென்று எனக்குத் தெரியாதே! (சிரிக்கிறார்)

*கல்கி:* மக்கள் சிந்தித்து வாக்களித்தால் மீண்டும் நீங்கள் வந்துவிடுவீர்கள். புள்ளி விவரம் எடுத்த போது படித்தவர்கள் மத்தியில் தி. மு. க. வுக்கு அதிக ஆதரவும் படிக்காதவர்கள் மத்தியில் அ. தி. மு. க. வுக்கு அதிக ஆதரவும் இருப்பதாகச் செய்தித் தாள்களில் வந்திருக்கின்றன!

*கலைஞர்:* இதுவே எங்களுக்குப் பெரிய கிரெடிட்தானே!

*கல்கி:* அ. தி. மு. க. – இ. காங்கிரஸ் பாணியிலேயே தி. மு. க. வும் 'பந்த்' நடத்த வேண்டுமா?

*கலைஞர்:* அவர்கள் நடத்தியது சாலை மறியல். வாகனங்களை மறிப்பது. இது முழு அடைப்புக்கான் வேண்டுகோள். இரண்டுக்கும் இடையே வித்தியாசம் நிறைய உண்டு. வாகனங்களை அடித்து, உடைத்து அதன் மூலம் இங்கே சட்டம் – ஒழுங்கு குலைந்து விட்டது என்று காட்ட நினைத்தார்கள். அது தோல்வியடையவே சந்திரசேகரைப் பயன்படுத்திக் கொண்டார்கள். சாலை மறியல் நிலையான ஒரு ஆட்சியைக் கவிழ்க்க மேற் கொள்ளப் பட்ட சதி: அதில் பலாத்கார நோக்கு உண்டு: முழு அடைப்பு நிலையான ஓர் ஆட்சி கவிழ்க்கப்பட்டதற்கு மக்கள் தாங்களாகவே முன் வந்து காட்டிய எதிர்ப்பு.

*கல்கி:* மத்தியில் தேவிலால் இப்போது நிறையக் குறைகள் சொல்ல ஆரம்பித்திருக்கிற சூழ்நிலையில், வரப் போகிற தமிழக சட்டமன்றத் தேர்தலோடு, நாடாளுமன்றத் தேர்தலும் சேர்ந்து வரும் என்று கருதுகிறீர்களா?

*கலைஞர்:* டெல்லியில் ஒவ்வொரு நாளும் ஒவ்வொன்று நடப்பதால் எதையும் உறுதியாகச் சொல்ல முடியாது. பாலிகாவில் தேவிலால் படித்த உரையில் ஆந்திராவிலுள்ள நக்ஸலைட் பிரச்னையையும் தமிழகத்திலுள்ள விடுதலைப் புலிகள் பிரச்னையையும் ஆந்திர அரசும் தமிழக அரசும் திறமையாகச் சமாளிக்கும் என்றுதான் அச்சிடப்பட்டிருந்தது. பிறகுதான் அவசர அவசரமாகத் தமிழக அரசு என்பதை அடித்து விட்டு மத்திய அரசு திறமையாகச் சமாளிக்கும் என்று மாற்றப்பட்டிருக்கிறது. ஆக தி. மு. க. அரசு கலைக்கப்படுகிற விஷயம் தேவிலாலுக்கு முன்பே தெரியாது. தெரிந்திருக்குமானால் அவர் இதை விரும்பியிருக்க மாட்டார் என்பதால்தான் துணை பிரதமருக்குத் தெரிவிக்காமலே செய்திருக்கிறார்களென்று நினைக்கிறேன்.

*கல்கி:* சட்டமன்றத் தேர்தல் மட்டும் நடந்தால் உங்களுக்குச் சாதகமாக அனுதாப அலை ஏதாவது இருக்குமென்று கருதுகிறீர்களா?

*கலைஞர்:* அனுதாப அலை இருக்கிறதோ இல்லையோ, ஜனநாயகக் கடமையைச் செய்தே ஆக வேண்டும். ஆளுங்கட்சியானால் வாய்ப்பைப் பயன்படுத்தி மக்களுக்கு நன்மைகள் செய்வோம். எதிர்க்கட்சியானால், 'சட்டசபை செத்து விட்டது' என்று சட்டசபைக்குப் போகாமல் இருக்க மாட்டோம். சட்டசபைக்குப் போய், தினமும் கலாட்டா செய்து கொண்டிருக்க மாட்டோம். எங்களுக்குக் கருத்துக்களைப் பேசத் தெரியும் என்பதால், எப்படியானாலும் எங்கள் கடமைகளைத் தொடர்ந்து செய்து கொண்டுதான் இருப்போம்.

அட்டை வண்ணப்படம்: **சுபா**
படங்கள்: **யோகா**



• புது மனிதன் படத்தில் சத்யராஜுடன் தமிழழகன்.

●● 'போன மச்சான் திரும்பி வந்தான்' என்பது யாருக்குப் பொருந்துகிறதோ இல்லையோ, கனகாவுக்குக் கனப்பொருத்தம். 'கரகாட்டக்காரன்' படப்பிடிப்பு நடந்து கொண்டிருந்தபோதே ஒப்பந்தமான படம் 'தாலி கட்டிய ராஜா'. கரகாட்டக்காரன் வெளிவந்து ஹிட்டானவுடன் பெரிய பெரிய பானர் படங்களில் மட்டுமே கவனம் செலுத்திய கனகா, 'தாலிகட்டிய ராஜா' வைச் சுத்தமாக மறந்தே போய்விட்டார்.



• விக்ரமன் : தேடிக் கொண்டிருக்கிறார்...

அதனால் கனகா இல்லாமல் முரளி மட்டும் வரக்கூடிய காட்சிகளையே எடுத்துக் கொண்டிருந்தார்கள். பிறகு முரளியும் பிஸியாகிக் கனகா வழியைப் பின்பற்றவே, படப்பிடிப்பு ஸ்தம்பித்துப் போய்விட்டது. இப்போது இருவருடைய மார்க்கெட்டும் டல்லடிக்க ஆரம்பித்தவுடன் பழையபடி 'தாலி கட்டிய ராஜா'வின் படப்பிடிப்பு படுவேகமாக நடந்து கொண்டிருக்கிறது!

●● ஏ.கே 27 என்று ஒரு படம். பாடல்களே இல்லையாம். ஆச்சரியமில்லைதான். ஆனால், கதாநாயகன், கதாநாயகி என்று

## கதாநாயகி-கதாநாயகன் இல்லாமல் ஒரு படம்!

கூட ஒருவருமே இல்லை என்பதுதான் வியப்புக்குரிய விஷயம்! முழுப் படத்தையும் முழுக்க முழுக்க ஒரு சினிமா தியேட்டரைச் சுற்றியே எடுத்திருக்கிறார்களாம். கதை, வசனம், டைரக்ஷன், எடிடிங், நடிப்பு.... என்று எல்லாவற்றையுமே செய்திருப்பவர் இப்படத்தின் தயாரிப்பாளரான எஸ். ஜி. சேகர் என்பவர்தான். அது சரி, அது என்ன ஏ. கே. 27? ஏதாவது நியூமராலஜி விவகாரமோ?

●● மணிவண்ணன் டைரக்ஷனில் சத்யராஜ் நடித்த ஐந்து படங்களுமே சூப்பர் ஹிட். ஆயினும் அவர்களிடையே ஒரு சின்ன இடைவெளி ஏற்பட்டு விட்டது. இப்போது 'புது மனிதன்' என்ற தமது படத்தின் மூலம்



• முரளி — கனகா : திரும்பி வந்த ஜோடி!

அவர்களை மீண்டும் ஒன்று சேர்த்திருப்பவர் ஆர்.எம். வீரப்பன். மணிவண்ணன் என்ன செய்திருக்கிறார், தெரியுமா? தயாரிப்பாளராயிருந்த ஆர்.எம்.வீயின் மகன் தமிழமுகனைப் புதுமனிதனில் நடிக்க வைத்திருக்கிறார்!

●● 'புதுவசந்தம்' ஹிட்டானவுடன் டைரக்டர் விக்ரமனுக்கு ஏகப்பட்ட வாய்ப்புகள். தாசரி நாராயணராவ், 'பாட்டு ஒண்ணு பாடட்டுமா' என்கிற படத்திற்கு புக் செய்தார். சினிமா பி.ஆர்.ஓ. நெல்லை சுந்தரராஜன் கூட 'பூமகள் ஊர்வலம்' என்று அவரை வைத்து ஒரு படம் துவங்கினார். ஆனால் இப்போது வெளிவந்துள்ள 'பெரும்புள்ளி' படம் தோல்வியடைந்தவுடன் அனைவருமே விக்ரமனைக் கைகழுவி விட்டார்கள்! எனவே, தாமே ஒரு சொந்தப்படம் தயாரிப்பதற்காகப் பைனான்ஸியரைத் தேடிக் கொண்டிருக்கிறார் விக்ரமன்.

தொகுப்பு: எஸ். பாலு







செய்தி –
'எந்த வகையிலாவது சதாம் உசேன் சாக வேண்டும் என்று விரும்புகின்றேன்'
– புஷ்








# கல்கி

1991 பிப்ரவரி 17
மலர் : 49 இதழ் : 29
பிரமோதூத மாசி 5



## ராஜீவ் சரணாகதி!

பன்னாட்டுப் படைகளுக்கு ஈராக் பணிகிறதோ, இல்லையோ, ஜெயலலிதாவிடம் ராஜீவ் சரணாகதி அடைந்துவிட்டார். 234 சட்டமன்றத் தொகுதிகளில் 66 மட்டுமே இ. காங்கிரஸுக்காம். மற்றவை அ. தி. மு. க. வுக்காம்! வெற்றி முழக்கம் செய்கிறார் ஜெயலலிதா. ஒப்பாரி வைக்கிறது தமிழக காங்கிரஸ். வாழப்பாடி அண்டு கம்பெனி இலேசாக முணுமுணுத்து ஆட்சேபனை எழுப்பியதுதான் மிச்சம். அவர்களைத் தலையில் குட்டி அனுப்பிவிட்டார் அவர்களது தன்னிகரில்லாத் தலைவர் ராஜீவ்! மத்தியில் தாம் ஆட்சி செலுத்த வேண்டும் என்ற ஒரே சுயநல நோக்கத்துக்காகத் தமிழக காங்கிரஸை அ. தி. மு. க. தேவதைக்குப் பலி கொடுத்துவிட்டார்.

இதிலே மேலும் பரிதாபமான விஷயம் தோழமைக் கட்சிகளுக்கு வழங்கப்படும் தொகுதிகள் அ. தி. மு க. பங்கிலிருந்து மட்டுமின்றி, இ. காங்கிரஸ் பங்கிலிருந்தும் தரப்பட வேண்டும் என்ற உடன்பாடு. எனவே, இ. காங்கிரஸின் பங்கு மேலும் குறையும். இவற்றில் அது வெற்றிபெறப் போவது இன்னும் குறைவாக இருக்கும். தமிழக காங்கிரஸே, உன் தலைவிதி இப்படியா ஆகவேண்டும்! எப்பேர்ப்பட்ட மாமனிதர்கள் இருந்து இந்தியாவின் கௌரவத்தையே உயர்த்திய அமைப்பு அது! ராஜாஜி, சத்தியமூர்த்தி, காமராஜர் காலத்துக்கு முன்னதாகவே மேதைகள் பலர் தமிழக காங்கிரஸில் இருந்து பாரத மக்கள் அனைவருக்கும் வழிகாட்டினார்கள். காங்கிரஸ் சார்பாக விளக்குக் கம்பத்தை நிறுத்தி வைத்தாலும் வோட்டு விழும் என்ற காலம் ஒன்று தமிழகத்தில் இருந்தது. அதெல்லாம் பழங்கதையாய்க் கனவாய்ப் போய்விட்டது. போகட்டும், குறைந்தபட்சம் சுயகௌரவத்தையாவது காப்பாற்றிக் கொள்ளக் கூடாதா? இப்படியா அடுத்தடுத்துச் சினிமா நட்சத்திரங்கள் முன் கைகட்டி நின்று, அவர்கள் போடும் பிச்சையை ஏற்றுத் திருப்தி அடையவேண்டும்? தமிழக காங்கிரஸே, உனக்கு முதுகெலும்பே இல்லையா?

இடையில் மூப்பனார் அதன் கூனை நிமிர்த்தப் பார்த்தார். சென்ற சட்டமன்றத் தேர்தலின் போது அதைத் தனித்துப் போட்டியிடச் செய்து கணிசமான வெற்றி கண்டார். இப்போது ஆட்சி கலைக்கப்படும் முன் பிரதான எதிர்க்கட்சி என்ற தகுதியைக் கூட அது பெற்றது. இனி என்ன இருக்கிறது, "ஜால்ரா கட்சி" என்ற பெயரைத் தவிர? 'ஜெ' பதவிக்கு வந்தால், சட்டமன்றத்தில் ஜிங்சக். ராஜீவ் பதவிக்கு வந்தால் நாடாளுமன்றத்திலும் ஜிங்சக்! எதற்கும் முன் எச்சரிக்கையாகத் தமிழக இ. காங்கிரஸ்காரர்கள் ஆளுக்கொரு ஜால்ரா வாங்கி வைத்துக் கொள்வது நல்லது.

தொகுதி உடன்பாடு எண்ணிக்கை அளவில் ஏற்பட்டு விட்டதால் (எந்தத் தொகுதி யாருக்கு என்பது இனி பேசப்படும்) தேர்தல் சீக்கிரமே வந்துவிடும் என்று கருத இடமுண்டு. அதே நேரத்தில் இங்கே கதவடைப்பு மக்களிடம் பெற்ற பேராதரவு ராஜீவைச் சிந்திக்கவும் வைத்திருக்கும். தி. மு. க. அரசை விரும்பாதவர்கள் கூட, மத்திய அரசின் சர்வாதிகாரப் போக்கைக் கண்டிக்கிறார்கள் என்பதை பந்த் பெற்ற பெருவெற்றி உணர்த்தியிருக்கும். ஸி. ஐ. டி. அறிக்கையும் போயிருக்கும். தி. மு. க. சார்பில் ஏற்பட்டிருக்கும் அனுதாப அலை தங்களுக்குப் பாதகமாக முடியக்கூடும் என்பதை ராஜீவ் கணிக்காமல் போக மாட்டார். எனவே, சட்டமன்றத் தேர்தலைச் சற்றுத் தாமதப் படுத்தி, அதன் கூடவே நாடாளுமன்றத் தேர்தலும் நடக்க வழி வகுக்கப்பட்டால் வியப்பதற்கில்லை. அப்போது ஆட்சிக் கலைப்பு மட்டும் பிரச்னையாக இராது; வேறு பல அம்சங்களும் மக்களைத் திசை திருப்பும்.

ஏற்கெனவே தேவிலால், சந்திரசேகர் மீது அதிருப்தி அடைந்து பிரதமரை எச்சரிக்கவே ஆரம்பித்துவிட்டார். எம். பி. பதவி இழந்தவர்களை அமைச்சர்களாக நீடிக்க விடக்கூடாது என்றும், வேறு பல குறைகளையும் அடுக்குகிறார். 'ராஜீவ்தான் பிரதமராக வேண்டும்' என்று அவர் பேசி வருவதாகக் கூடச் செய்திகள் வருகின்றன!

இரண்டு தேர்தல்களும் சேர்ந்து வந்தாலும் தனித்தனியே வந்தாலும் தமிழக காங்கிரஸைப் பொறுத்தமட்டில் அது முதுகெலும்பு இழந்து நொடிந்து கிடக்கிறது என்பது தெளிவு. தமிழக மக்களாவது தங்களை முதுகெலும்பு உள்ளவர்களாக நிரூபித்துக் கொள்ளட்டும்.

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.

# மதிப்பிற்குரிய ஆசிரியர்

கல்லூரி
மாணவர்
கட்டுரைப்
போட்டி!

ரூ. 50 பரிசு
பெறும்
கட்டுரை



திருப்பரங்குன்றம் எம். எம். மேல் நிலைப் பள்ளியின் தலைமையாசிரியர் திரு. நடன குருநாதன். பத்தாம் வகுப்பில் தேர்ச்சி, அறுபத்தைந்து சதவீதமே இருந்த போது அதை உயர்த்துவதற்கு இவர் மேற்கொண்ட முயற்சிகள் காரணமாக, இது வருடா வருடம் அதிகமாகி, சென்ற வருடம் தொண்ணூற்று எட்டு சதவீதத்தை எட்டியது. நானூறு மதிப்பெண்களுக்கு மேல் பெற்றவர் இருபது மாணாக்கர்கள்.

நல்ல வசதி பெற்ற, படித்த பெற்றோர்களின், குழந்தைகளை வைத்து அதிகமான தேர்வு விழுக்காடுகள் பெறுவதில் வியப்பில்லை. வசதியற்ற கிராமங்களில், வசிக்கும் ஏழை மாணாக்கர்களின் அறிவுச் சுடரைப் பிரகாசப்படுத்தி, இப்படி ஓர் உயர்ந்த நிலைக்குப் பள்ளியை இட்டுச் சென்றது பெருமைமிகு செயலல்லவா!

தொடர்ந்தாற்போல் தாமதமாகப் பள்ளிக்கு வந்த மாணவனை விசாரிக்கையில், அவன் வீடு தொலைவிலுள்ள கிராமத்திலுள்ளது என்றும், பஸ் வசதி, நேரத்திற்கு இல்லையாதலால், ஏழையான அவன் நடந்து வருகிறானென்றும் தெரிந்து தம் செலவிலேயே அவனுக்குச் சைக்கிள் வாங்கித் தந்து அவன் நேரத்திற்குப் பள்ளி வர உதவினார். அவர் வீட்டிலேயே உணவு உண்ட மாணவர்கள் பலர்.

இச்செயல்கள் எல்லா மாணவரிடையேயும் நன்றி உணர்வோடு கடமை உணர்வையும் கட்டி உழைத்து முன்னேறச் செய்தன.





— டி. எஸ். கிருஷ்ணன்,
இரண்டாமாண்டு பொறியியல்
(மெக்கானிகல்),
நேஷனல் இஞ்சினியரிங் கல்லூரி,
நாலாட்டின்புத்தூர் — 627 716.
கோவில்பட்டி தாலுகா.


**•சிந்திக்க ஊக்கியவர்!**

தற்போதைய கல்வி முறை அறிவு பெறுவதைவிட மனப்பாடம் செய்வதையே ஊக்குவிக்கிறது என்பது எல்லோரும் அறிந்ததே. இதனைத் தம் அளவிலேனும் மாற்றி அமைக்கத் திட்டமிட்டுச் செயல்படுகிறவர், பேராசிரியர் ரா. அனந்தன். 'கற்பித்தல் என்று ஒன்று கிடையாது. கற்றல் என்ற ஒன்றுதான் உண்டு. உங்களுக்கு விருப்பமானால் கற்றலுக்குத் துணை புரிவதைக் கற்பித்தல் என்று கூறுங்கள்' என்று சொல்கிறார் வைணவக் கல்லூரியில் பணிபுரியும் இந்த இயற்பியல் பேராசிரியர்.

கம்ப்யூட்டரில் விஷயங்களைச் சேமித்து வைப்பது போல் மாணவன் மூளையில் விஷயத்தைத் திணிக்கக் கூடாது. மாணவன் கம்ப்யூட்டரினும் மேம்பட்டவன். தானாகச் சிந்திக்கும் ஆற்றல் பெற்றவன். சிந்திக்க வேண்டிய பொருளைத் தெளிவுபடுத்தி, அதுபற்றி அவன் சிந்திப்பதை ஊக்குவித்து, சிந்திக்கும் வழிமுறைகளை நெறிப்படுத்தி, அத்தகைய சிந்தனையின் பயனாக அம் மாணவனை உண்மை உணரச் செய்வது பேராசிரியர் அனந்தன் பின்பற்றும் பயிற்று முறை. தெளிவு ஏற்படும் வரையில் விளக்கம் கோரும் உரிமை மாணவனுக்குண்டு; விளக்குவது ஆசிரியரின் கடமை என்பது இவர் கருத்து. ஆகவே, இவரிடம் தன் அறியாமையை வெளிப்படுத்திக் கொள்ள எந்த மாணவனுக்கும் தயக்கம் உண்டாவதில்லை. "உன்னாலும் சிந்தித்துத் தெளிவுபெற இயலும்" என்பதை எடுத்துக் காட்டி, இவர் அளிக்கும் ஊக்கத்தால், தாழ்வுணர்ச்சியிலிருந்து விடுபட்ட மாணவர்கள் பலர்.




பேராசிரியர் அனந்தன், "இயற்பியல் சங்கம்" (The Physics Society) என்ற ஒன்றை நிறுவி 1971 ஆம் ஆண்டிலிருந்து நடத்தி வருகிறார். இந்தச் சங்கத்தினால் பல கல்லூரி மாணவர்களும் மிகுந்த பயனுறுகிறார்கள். சங்கக் கூட்டங்கள், விளக்க உரையாக மட்டுமின்றி விவாத மேடையாகவும் விளங்கிச் சிந்தனையைத் தூண்டும். இதனால் அறிவு வேட்கை கொண்ட மாணவர்கள் அடையும் மனநிறைவை எழுத்தில் வடிக்க இயலாது; அனுபவித்தே தெரிந்து கொள்ள முடியும்.

பேராசிரியரின் பெருமுயற்சியால் ஒவ்

வோர் ஆண்டும் பல மாநிலங்களில் பன்னிரண்டாம் வகுப்பு மாணவர்களுக்கு, இயற்பியல் திறனாய்வுத் தேர்வு ஒன்று நடத்தப் பெறுகிறது. ஆயிரக்கணக்கான மாணவர்கள் இத்தேர்வினை எழுதி, தகுதியின் அடிப்படையில், மேற்படிப்பிற்கான உதவித் தொகையும், பரிசுகளும், சான்றிதழ்களும் பெறுகின்றனர்.

— மு. க. ரகு,
மூன்றாம் ஆண்டு பி. எஸ்ஸி.,
(இயற்பியல்),
இலயோலா மாலைக் கல்லூரி,
சென்னை — 600 034.

## பெற்றோர் மனத்தை மாற்றிய பரிவு

நான் சரியாக வகுப்புகளுக்குச் செல்வதில்லை. காரணம் நான் ஓர் ஏழைக் கூலிக்காரனின் மகன். ஏழ்மையைக் கருதி என் தந்தை என்னைப் பள்ளிக்குச் சரியாக



அனுப்பாமல் கூலி வேலைக்கு அனுப்பி விடுவார். தலைமை ஆசிரியர் என்னைப் பள்ளியிலிருந்து விலகும்படியும், மாற்றுச் சான்றிதழைப் பெற்றுக் கொள்ளும்படியும் உத்தரவிட்டார். இதைக் கேட்ட நான் அதிர்ச்சி அடைந்தேன். அப்போது என் மதிப்பிற்குரிய ஆசிரியர் கே. சுப்பிரமணியன் தலைமையாசிரியரைப் பார்த்து, ''இவன் நன்கு படிக்கும் மாணவன். ஏழ்மையின் காரணத்தினால் சரியாகப் பள்ளிக்கு வருவதில்லை. இன்னொரு வாய்ப்புக் கொடுத்துப் பாருங்கள்'' என்று கூறி மீண்டும் என்னை வகுப்பறைக்குள் சேர்த்தார். எனக்கு இரண்டு சட்டையும், அரைக்கால் சட்டையும் எடுத்துக் கொடுத்துப் பள்ளிக்கு வரச் செய்தார். இதைக் கண்ட பிறகு என் பெற்றோரும் தெளிவு பெற்று என்னைப் பள்ளிக்கு ஒழுங்காக அனுப்பினார்கள். இவர் செய்த அந்த உதவியின் காரணமாகத் தான் இன்று கல்லூரிப் படிப்பையும் தொடர்கிறேன்.

— இரா. பொய்யாது,
இளம் அறிவியல் முதலாம் ஆண்டு
(இயற்பியல் துறை),
அ. கோவிந்தசாமி அரசினர் கலைக்
கல்லூரி,
— 604 002.



## ஆசிரியரே மாணவராகி...

''உங்களுக்கு'' நானே சொல்லிக் கொண்டிருந்தால் பாடத்தில் கவனம் இருக்காது'' என்று கூறி, பள்ளி மாணவனைப் பாடம் நடத்தச் சொல்லித் தாம் மாணவர்களிடையே அமர்ந்து கொள்வார் ஜெயக்கிருஷ்ணன். தம்மைக் கேள்விகள் கேட்கச் சொல்லிப் பதிலளிப்பார். வேடிக்கையான மனிதர். ஆனால் அந்த வேடிக்கையில் அறிவுத் திறன் இருந்ததை நாங்கள் பரீட்சை சமயத்தில் உணர்ந்து கொண்டோம். ஆசிரியர் வேடிக்கையான உவமைகளுடன் சொன்ன பதில்கள் பசுமரத்து ஆணி போல் மனத்தில் பதிந்து பரீட்சை சமயத்தில் வெகு சுலபமாக ஞாபகத்திற்கு வந்து உதவின.

— டி. சுரேஷ் குமார்,
தாவரவியல் — முதலாமாண்டு,
ந. ம. க. கல்லூரி,
பொன்னாச்சி — 642 001.

## பரீட்சைக்குப் பணம் கட்டியவர்!

என் மதிப்பில் உயர்ந்தவர் சுதாகர் என்னும் இயற்பியல் ஆசிரியர். என் பள்ளியில் உயர்நிலை வகுப்புகளுக்கு ஆசிரியராக வந்தவர்.

ஒரு சம்பவம். பரீட்சைக்குப் பணம் கட்டுவதற்கு ஒரு மாணவனுக்கு மட்டும் பணம் இல்லை. அவனுடைய தந்தை ஒரு கூலிக்காரர். அந்தப் பையன் காலையில் பேப்பர் போட்டும், கீரை விற்றும் பணம் சம்பாதித்து, வீட்டுச் செலவுக்குக் கொடுத்து வந்தான். அவன் பரீட்சைக்குப் பணம் கட்ட முடியாமல் திணறிய சமயம் — ஆசிரியர் சுதாகர் அதைப் புரிந்து கொண்டு அவனுக்குத் தெரியாமலேயே பணம் கட்டி விட்டார்! விவரம் அறிந்து நன்றி செலுத்த வந்த அவனைப் பார்த்து, ''நீ நன்றாகப் படித்து நல்ல வேலையில் அமர்ந்த பின்னர் உன்னைப் போல் படிக்க விரும்பி, ஆனால் பணம் இல்லாமல் அவதிப்படும் மாணவனுக்கு நீ உதவினால் அதுவே நீ எனக்குச் செய்யும் நன்றிக் கடனாகும்'' என்று சர்வ சாதாரணமாகச் சொன்ன பெருந்தகை அவர்.

பல மாணவர்களுக்கும் பண உதவி செய்திருந்தார். அவர்கள் அதைத் திருப்பிக் கொடுக்கும் போது சுவாமி படத்திற்கு

முன்பு வைத்து விடச் சொல்வார். அவர்கள் எவ்வளவு கொடுக்க வேண்டும் என்று எழுதிக் கூட வைக்க மாட்டார்!

— எஸ். ரேவதி,
பி. ஏ. முதல் ஆண்டு,
ஐ. ஆர். டி. டி. வாசவி கல்லூரி,
ஈரோடு — 638 316.

## இரவு கண் விழிப்பு : வாழ்வின் விடியல்

என்றும் மறக்க முடியாது என் நெஞ்சில் நிறைந்தவர் என் ஆசிரியர் ஜோசப் செபாஸ்டின். பாளையங்கோட்டை செயின்ட் சேவியர்ஸ் மேல்நிலைப் பள்ளியில் அப்போது நான் எட்டாம் வகுப்பில் படித்து வந்தேன். சிறு வயதிலிருந்தே ஆஸ்த்மாவால் அவதிப்பட்டுக் கொண்டிருந்த நான், அன்று மாலை பள்ளி முடிந்த பின்பும் வாசலில் நின்று கொண்டிருந்தேன். 'வீஸிங்'கில் முகம் கறுத்து, சிறிது முன் குனிந்து, மூட்டுகளில் கைகளை ஊன்றிய படி நின்றபோது, பின்னால் ஒரு குரல் என்னைக் கனிவுடன் அழைத்தது: "என்ன தம்பி! இன்னும் போகலே!" என்று கேட்டவர், அருகில் வந்ததும், "ஆஸ்த்மா மாதிரி இருக்கே!" என்று கூறி முதுகைப் பரிவுடன் தடவிக் கொடுத்தார்; "நடந்து செல்ல வேண்டாம்" எனக் கூறி வீடு வரை அவர் சைக்கிளில் ஏற்றிக் கொண்டு வந்து விட்டு விட்டுப் போனார். அது மட்டுமா?



சுகவீனமான உடல்நிலை என்ற தாழ்வு மனப்பான்மையுடன் இருந்த என்னிடம், 'உன்னால் முடியும்' என்ற நம்பிக்கையை வளர்த்துப் பேச்சுப் போட்டி, கட்டுரைப் போட்டி எனப் பல போட்டிகளில் கலந்து கொள்ளச் செய்தார். அவரது ஊக்கத்தினால் பல வெற்றிகளை அடைந்தேன். "ஆஸ்த்மாவில் நீ இரவு விழித்திருக்கிற போது சிந்திக்கக் கற்றுக் கொள். அது உன் வாழ்வின் பெரிய விடியலுக்கு வழி வகுக்கும்" என்ற அவரது வார்த்தைகள் இன்றைக்கும் என்னுள் ஒலிக்கிறது.

— ஜி. சிவராமன்,
இளங்கலை சித்த மருத்துவப் பட்டப்படிப்பு,
நான்காம் ஆண்டு,
அரசினர் சித்த மருத்துவக் கல்லூரி,
பாளையங்கோட்டை.

## ஆங்கில அஸ்திவாரம்

ஐந்தாம் வகுப்பு வரை தமிழ் மீடியத்தில் பயின்ற எனக்கு ஆறாம் வகுப்பில் ஆங்கில மீடியத்தில் சேர வேண்டும் என்று ஆசை வந்துவிட்டது. தல்லாகுளத்திலுள்ள அமெரிக்கன் கல்லூரி மேனிலைப் பள்ளியில் ஆங்கில மீடியத்தில் சேர்ந்து விட்டேன்.

வகுப்பாசிரியர் பீட்டர் சுப்புராஜ் அனைவருக்கும் ஆங்கிலம் நன்றாகப் பேச வர வேண்டும் என்பதற்காகத் தமிழில் பேசினால் அபராதம் என்று கூறிவிட்டார். ஐந்தாம் வகுப்பு வரை வகுப்பில் முதல் மாணவனாகத் திகழ்ந்த எனக்குப் பைத்தியம் பிடித்தது போலானது. தமிழ்ப் பாட வேளை தவிர மற்ற நேரங்கள் அனைத்திலும் ஆங்கிலம் கேட்டுக் கலவரமடைந்ததோடு மற்றவர்களுடன் பேச முடியாமல் ஊமை போலானதால்மனோதத்துவரீதியில்மிகவும் பாதிக்கப்பட்டேன்.

மாதாந்திரத் தேர்வு வந்தது. தமிழ் மீடியத்துக்கு மாறுதல் வாங்கிக் கொண்டு போய் விடலாமா என்ற குழப்பத்திலிருந்த எனக்கு திடீரென்று ஓர் உத்வேகம் தோன்றியது. என் அருகில் அமர்ந்திருக்கும் நன்கு படிக்கக் கூடிய மாணவன் ஒருவனது நோட்டை வாங்கி எழுதிக் கொண்டு அதை அப்படியே மனப்பாடம் செய்தேன். அர்த்தம் ஏதும் சுத்தமாகப் புரியாமல்தான்!

எனது விடைத்தாளைக் கண்ட ஆசிரியருக்குச் சந்தேகம் ஏற்பட்டது. நான் காப்பியடித்ததாக முடிவு செய்து என்னைத் தனியாக அழைத்து விசாரித்தார். "இப்போது கூட என்னால் எல்லாக் கேள்விகளுக்கும் பதில் கூற முடியும்" என்று கூறினேன். அவர் ஒவ்வொரு கேள்வியாகக் கேட்க, உடனுக்குடன் பதில் கூறினேன். கடைசிக் கேள்விக்கு மிகவும் நீளமான விடை. ஒப்பிக்கத் தொடங்கிய எனக்கு இடையில் மறந்து போய்விட்டது. மீண்டும் முதலிலிருந்து வேகமாகக் கூறி வந்து தடை ஏற்பட்ட இடத்தைக் கடந்தேன். எனது பிரச்னை என்ன என்று அவருக்குப் புரிந்து போனது. நிதானமாக, 'நீ கூறிய விடைக்குத் தமிழில் அர்த்தம் கூறு' என்றார். விக்கி விக்கி அழுதுவிட்டேன். மெல்ல என்னைத் தட்டிக் கொடுத்தவர், உடனடியாக வகுப்பில் யாரெல்லாம் தமிழ் மீடியத்திலிருந்து வந்தவர்கள் என்று விசாரித்தார். ஐந்தாறு பேர் எழுந்தனர். அனைவரையும் பள்ளி முடிந்த பின்பு காத்திருக்கச் சொன்னார். எங்களுக்குத் தினமும் மாலையில் ஒரு மணி நேரம் ஆங்கிலத்தில் விசேஷப் பயிற்சியளித்தார். அவர் போட்ட அஸ்திவாரத்தின் பலத்தால்தான் பொறியியற் கல்லூரி வரை என்னால்உயர முடிந்துள்ளது.

— மு. செந்தில்,
கம்ப்யூட்டர் சைன்ஸ், மூன்றாம் ஆண்டு,
மெப்கோ பொறியியற் கல்லூரி,
சிவகாசி — 626 005.







# இயல்-இசை-நாடகம்

'நாடக உலகமே நாலாந்தரமாகி விட்டது' என்று குறைப்படுவீர்களே தவிர, நல்லதாக ஒரு நாடகம் வந்தால் நாலு வரி எழுத மாட்டீர்களே' என்ற பழிச் சொல் நமக்கு வேண்டாம். ஊஞ்சல் ஓர் உன்னதமான நாடகம். ஜோக் தோரணங்கள், காதல் சிக்கல்கள், சமுதாயப் பிரச்னைகள், அரசியல் கிண்டல்கள் என்பதாக ஏதுமின்றி ஒரு தனி மனிதனின் பிரச்னையை அரங்கேற்றுகிறது. அதிலும் காலம் மாறிவிட்டது என்பதைப் புரிந்து கொள்ள முடியாத ஒரு வயதானவரின் — கிட்டத்தட்ட கிழவனாரின் — கதை! வளமாக வாழ்ந்த போது எதிர்காலம் பற்றிச் சிந்திக்காமல், இருந்ததையெல்லாம் வாரிவிட்டுவிட்டு, இப்போது பழம் பெருமை பற்றிய நினைவுகளுடன் மட்டுமே ஊஞ்சலாடிக் கொண்டிருக்கும் அவரைத் துல்லியமாகச் சித்திரிக்கிறார் பூர்ணம் விசுவநாதன். 'பூர்ணம் இல்லையெனில் நாடகம் இல்லை' என்னுமளவில் அவரை மையத்தில் நிறுத்தி மற்றவர்கள் கோள்களாகச் சுற்றி வருகிறார்கள். புதுமையான சித்திரிப்பு; ஊடாடும் சோகம்; கடைசியில் விபத்தா, தற்கொலையா என்று புரியாத மரணம். கனத்தை நம் இதயத்தில் ஏற்றுபவர் நாடகாசிரியர் சுஜாதா. நாடகம் வெற்றி பெற்றால் தமிழர்களின் ரசனையில் நம்பிக்கை பிறக்கும்!

வார்த்தை ஜாலம் செய்து கவிதை எழுதலாம்; ஓசை நயத்துக்காகச் சொற்களைத் தேர்ந்தெடுக்கலாம்; உவமைகளையும் உருவகங்களையும் உருவாக்கித் தரலாம். ஆனால் சிந்தனைச் செறிவு சேர்ப்பது தான் கஷ்டம். அதுதான் சாதா கவிஞனிடமிருந்து ஸ்பெஷல் கவிஞனை வேறுபடுத்திக் காட்டுவது. வைரமுத்து கவிதைகள் ஸ்பெஷல் ரகம். படிக்கப் படிக்க, 'இந்தச் சிந்தனை இவருக்கு எப்படித்தான் தோன்றியதோ?' என்று வியக்க வைக்கும்; ஒவ்வொரு சிந்தனைச் சிதறலையும் மறுமுறையும் படித்து ரசிக்கச் செய்யும். வைரமுத்துவின் கவிதைகள் இப்போது கேஸட்டுகளாகவும் கிடைக்கின்றன. படித்து ரசிப்பதுடன் அவருடைய கணீர்க் குரலிலேயே கேட்டும் மகிழலாம். விலாசம்: சவுண்ட் டிரானிக்ஸ், 11—D, ராமசாமி தெரு, தி. நகர், சென்னை — 17.

சிலரது இசையைக் கேட்கும் போது, 'இவர் இசைக்குச் சேவை செய்கிறார்' என்று தோன்றும். வேறு சிலரது கச்சேரிகளைக் கேட்கும் போது 'இசை இவருக்குச் சேவகம் புரிகிறதோ' என்று அதிசயிக்க வைக்கும். ராஜ்குமார் பாரதி இப்படித் தான் நம்மை வியப்பில் ஆழ்த்துகிறார். பெயரிலேயே உள்ள சரஸ்வதியின் அருளைக் குறையின்றிப் பெற்றிருக்கிறார். அநாயாசமாக ஆலாபனை செய்து ராக வடிவங்களை அற்புதமாகச் சித்திரிக்கிறார். மொழிக்குத் துரோகம் செய்யாமல் கீர்த்தனைகளைச் செவ்வனே உச்சரித்துப் பாடுகிறார். கார்வை கொடுத்து நிற்கும் நேர்த்தியில் சொக்க வைக்கிறார். சுருதி சுத்தத்தால் நம் இதயத்தைச் சுருட்டிக் கொள்கிறார். பிர்க்காக்களை லாவகமாக உதிர்த்துச் சிலிர்க்கச் செய்கிறார். சுவரம் பாடும் போது 'கணக்கு வழக்கும் தெரியும்' என்று காட்டிக் கொள்கிறார். பாரதியின் கொள்ளுப் பேரனுக்கு இசை ஆர்வம் இரத்தத்தில் இருக்கலாம். ஆனால் குரல் வளம் இறைவன் கொடுத்தது. இசை ஞானம் டி. வி. ஜி. யும் இதர குருக்களும் கொடுத்தது. அவற்றைச் சிதற விடாமல் குவித்து, குருவுக்கும் தெய்வத்துக்குமே தொடர்ந்து அர்ப்பணித்து வந்தால், இன்றைய ராஜ்குமார், நாளை இசை உலகின் மகாராஜா என்ன, சக்கரவர்த்தியாகவும் உயரலாம்.

— கி. ராஜேந்திரன்.




வட்டமேஜை

# தேர்தலின்போது தெரியும்!

● இந்த வாரத் தலையங்கம் நம்மவர்களுக்குச் சரியான சவுக்கடி!

திருவையாறு, எஸ். புவனேஸ்வரி.

● லிங்கன் சொல்லியிருக்கும் அருமையான கருத்துக்களைத் தலையங்கத்தில் சொல்லிவிட்டு, இவற்றை ஆட்சியிலுள்ளோர் செவி மடுக்கமாட்டார்கள் என்று மனம் சலித்துச் சொல்லியிருக்கிறீர்கள். நீங்கள் சொல்வது ஆள்வோருக்கு வேண்டுமானால் செவிடன் காதில் ஊதிய சங்காகலாம். ஆனால் இவையெல்லாம் பொது மக்கள் சிந்தையில் ஏறிச் சிங்காதனம் இருந்து, தேர்தலின் போது கொள்கைமீறியோருக்கெல்லாம் ஆதரவைத் தராது சவுக்கடி தருகின்றதாய் அமையும்!

சென்னை—41, ப. விஜயபாலன்.

● "ஒரு கஷ்டமும் இல்லை; எல்லாப் பொருட்களும் தாராளமாக கிடைக்கின்றன" எனப் பிரதமரும், சிவில் சப்ளை அமைச்சரும் சொன்னது, தங்களைப் பற்றித்தான்; பொதுமக்களைப் பற்றி என நீங்கள் கற்பனை பண்ணிக் கொண்டால் அதற்கு அவர்களா பொறுப்பு!

திருவனந்தபுரம், எஸ்.எஸ். மணி.

● "போபோர்ஸ் ஃபைல்களின் இறுதியாத்திரை முடிந்து விட்டதா?" என்ற கேள்விக்குத் தராசின் பதில் அமர்க்களமான — அழுத்தமான (பசுமரத்தாணி) பதில்! தராசுக்கு இதோ என் பாராட்டு மாலை!

கருமத்தம்பட்டி, அ. இராஜப்பன்.

● "கிரிக்கெட் — நன்னடத்தை விதிகள் தேவைதானா?" கலந்துரையாடல் கிரிக்கெட் ரசிகர்களுக்கும் வாசகர்களுக்கும் மிகவும் பயனுள்ள தகவல்களைத் தந்தது.

சென்னை—1, இ.வி.எஸ். பாலகுமாரன்.

● அமெரிக்கா — ஈராக் யுத்தம் பற்றியும் அதன் விளைவுகள் பற்றியும் மிகுந்த அக்கறையுடனும், பொறுப்புடனும் அனைவரும் புரிந்து கொள்ளும் வகையில் வெளியிட்டிருப்பது அருமை.

பெங்களூர், ப. மூர்த்தி.

● "பெண்கள் ஆண்டு: அறிவிப்பு எதற்கு?" என்ற கல்லூரி மாணவ, மாணவியரின் கட்டுரைகளைப் படித்த ஒவ்வொருவரும் பெண்களுக்கு இழைக்கப்படும் அநீதிகளை அழிக்க முன்வருவார்கள் என்று நம்புகிறேன்.

அயன்புரம், இராஜவர்த்தனன்.

● சு. சமுத்திரத்தின் கதை படித்தேன். பிறருக்காக வருத்திக் கண்ணீர் வடிப்பவர்களை நிஜத்தில் பார்க்க முடியாவிட்டாலும் கதையிலாவது பார்க்க முடிகிறதே என்று சந்தோஷப்பட்டேன்.

கடலூர், ஆர். வேணுமணி.

● 'அறிவியல் பூங்கா...' தொடர்பான விவரங்கள் அனைத்தும் அருமை. தொழில் முனைவோர் மட்டுமின்றித் தொழிலாளருக்கும் 'அறிவியல் பூங்காவில்' பயிற்சி அளிக்கப்படுகிறது என்ற உண்மை தொழில் நுட்பத்துறையின் வளர்ச்சிக்கு மேலும் உறுதுணையாக விளங்குமென்பதில் ஐயமில்லை!

சென்னை—23, கி. ராமதாஸ்.

● தராசு பதில்களில், 'நான் ஜெயலலிதா கட்சிக்கு டைம்பாம் வைத்தாகிவிட்டது எனக் காளிமுத்து கூறியிருக்கிறாரே?' என்ற கேள்வியைப் படித்துக் கொண்டிருக்கும் போதே, இங்கே தி. மு. க. ஆட்சிக்கு "டைம் பாம்" வைத்துவிட்டார்கள். காளிமுத்துவின் பேச்சு சரியான வெத்து வேட்டு எனத் தாங்கள் பதில் கூறியிருப்பது மிக மிகப் பொருத்தமான நிரூபணமாயிற்று...!

புதுவண்டிப்பாளையம்,
கடலூர். த. ரவீந்திரன்.

● தமிழினியனின் "சில்லறைப் பிரச்னை" சிறுகதை நம் உள்ளம் தாழ்ந்திருக்கும் போது, நம் நம்பிக்கைக்கு மாறாக எதிராளியின் உள்ளம் சில சமயங்களில் உயர்ந்து நிற்கின்றது என்ற அரிய உண்மையைப் புலப்படுத்தும் சிறுகதை.

திருவாரூர், அ. சம்பத்.

● மச்சானின் திருமணம் சிறுகதை இன்றைய சமுதாயத்தில் நடக்கும் சம்பவத்தை வைத்தே எழுதப்பட்டிருக்கிறது.

தக்கோலம், அ. முஸ்தபா.

● அரசியல் கட்சிகளை நுழைய விடாத கிராமமா..? ஆச்சரியமாக இருக்கிறது! 'பிச்சை எடுத்தாவது படி' என்ற பெருமாளின் தாரக மந்திரமே அக்கிராம மக்களின் வளர்ச்சிக்கு வழிகாட்டி!

கோடிக்கரை, எஸ். ஷாந்தினி.

● அரசியல் கட்சிகளே ஊருக்குள் நுழையாததால்தான் வள்ளுவர் நகர் கிராமத்தில் நூறு சதம் படித்திருக்கின்றனர்; எல்லோரும் நல்ல வேலையில் அமர்ந்திருக்கின்றனர் என்பதை அறியும் போது, நம் நாட்டிலுள்ள எல்லாக் கிராமங்களும் இதுபோல் ஆகாதா என்று மனம் உண்மையிலேயே ஏங்குகிறது.

லால்குடி, எம். இராஜேந்திரன்.

● திரைப்பட விழாப் படங்களின் கதைகளை வெளியிட்டு, அதன் சத்தான அம்சங்களை, உணரச் செய்யும் கல்கியின் செயல் பாராட்டுக்குரியது.

திருச்சி — 8, குருகிருஷ்ணா.

● 'மாதம் ஒரு தொகுதி'யைச் சீக்கிரம் முடித்திருக்கக் கூடாதா? சட்டசபை கலைக்கப்பட்டு விட்டதால் இனி அந்தப் பகுதி நின்று போய் விடுமே!

சென்னை—101, பா. லெட்சுமி நாராயணன்.



* பெ. அருணாசலம்

# நிஜ நாடக இயக்கம்!



* இப்ராஹிம் ஷா

**ம**துரையில் 'நிஜ நாடக இயக்கம்' என்பதாக ஒரு கலை அமைப்பு தோன்றியிருக்கிறது. இதைச் சேர்ந்தவர்கள், திறந்த வெளிகளையே அரங்கங்களாகவும் வெறும் குறியீடுகளையே செட் அமைப்புகளாகவும் கொண்டு நடிக்கிறார்கள். இத்தகைய புதுமை நாடகங்கள் விழாக்களில் வேண்டுமானால் பாராட்டுதல்களைப் பெறலாம். ஆனால் சாதாரண மக்களிடம் பாராட்டுப் பெற வேண்டாமா? அவர்களுக்கு இது புரிய வேண்டாமா?

"எங்கள் நாடகம் சாதாரண மக்களுக்குப் புரியுமா என்கிற சந்தேகம் முதலில் எங்களுக்கும் இருக்கத்தான் செய்தது. கி. மு. 71ல் ரோமானிய அடிமைச் சமூகத்திலிருந்து அடிமைகளை ஒன்று திரட்டி, அரசை எதிர்த்துப் போராடிய ஸ்பார்டகஸ் என்ற வீரனின் வரலாற்றை நாங்கள் நாடகமாகப் போட்ட போது, முதலில் மற்ற கல்லூரிகளுக்குச் சென்று நடித்துக் காண்பித்தோம். ஒருவர் கைகளையூன்றிக் குனிந்து கொள்ள (படத்தில் உள்ளது போல்) மற்றவர்கள் அதற்குள் புகுந்து செல்கிற குறியீடு, குகைக்குள் செல்வதைக் குறிக்கிறது என்பது போன்ற விஷயங்களை யெல்லாம் மாணவ — மாணவியர் மிகச் சுலபமாகப் புரிந்து கொண்டு ரசித்துப் பாராட்டினார்கள். அந்த தைரியத்தில் நாங்கள் வெளியிலும் சென்று நடிக்க ஆரம்பித்தோம். சாதாரண ஜனங்களும் புரிந்து கொண்டு ரசித்தார்கள்" என்கிறார்கள் மதுரைக் கல்லூரியில் தத்துவம் பயிலும் மாணவர்களான பெ. அருணாசலமும் இப்ராஹிம் ஷாவும்.

"அண்மையில் மதுரை தெற்கு வாசல் மார்க்கெட், அரசரடி, கிருஷ்ணாபுரம் காலனி போன்ற இடங்களில் 'இரைச்சல்' என்னும் நாடகமொன்றை நடித்துக் காண்பித்தோம். சுற்றிலும் உருவாக்கப்படுகிற இரைச்சல்களால் எந்த அளவுக்குச் சுற்றுப்புறச் சூழல் பாதிக்கப்படுகிறது என்பதைத் தெரு நாடக வடிவிலேயே, எந்தவிதமான டாம்பீகமும் இல்லாமல் நடித்துக் காட்டிய போது, பார்த்த மக்கள் பலரும் 'இனி குறைந்தபட்சம் எங்கள் வீட்டு ரேடியோவையாவது அளவான சப்தத்தோடு பாட வைப்போம்; இரைச்சலிட வைக்க மாட்டோம்!' என்று உறுதி கூறிச் சென்றார்கள். இது எங்கள் நிஜ நாடகத்திற்குக் கிடைத்த வெற்றியல்லவா!" என்கிறார்கள் அந்த மாணவர்கள்.

தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழகத்தின் நாடகத் துறைப் பேராசிரியர் மு. இராமசுவாமி. இவர் முயற்சியால்தான் மதுரையில் இந்த இயக்கம் தோற்றுவிக்கப்பட்டது.

"எங்கள் கல்லூரி மாணவர்கள் இன்னொரு புதிய முயற்சியையும் மேற்கொண்டிருக்கிறார்கள். நமது பாரம்பரியக் கலையான தெருக்கூத்துக் கலையையும் தங்கள் நாடக இயக்கத்தோடு இணைத்துப் 'புரட்சிக் கவி' என்ற நாடகத்தை அரங்கேற்றியதன் மூலம், நாடகக் கலைக்கு ஒரு புத்தம் புதிய பரிமாணத்தையும் கொடுத்திருக்கிறார்கள்!" என்று பெருமை பொங்கக் கூறுகிறார் மதுரைக் கல்லூரியின் முதல்வர் ஜி. ராமமூர்த்தி.

— பிரின்ஸ்

படங்கள்: சுபா



* 'ஸ்பார்டகஸ்' நாடகத்தில் ஒரு காட்சி.

# பிரதோஷ காலம்– பிரதோஷ வரலாறு

சுக்கில பக்ஷம், கிருஷ்ண பக்ஷம் என்னும் இரண்டு பக்ஷத்திலும் வருகின்ற திரயோதசி திதியில் சூரியாஸ்தமனத்திற்கு முன் மூன்றே முக்கால் நாழிகையும், பின் மூன்றே முக்கால் நாழிகையுமாய் உள்ள காலமே பிரதோஷம் எனப்படும்.

## பிரதோஷ வரலாறு

### தசமி திதியன்று (பத்தாவது நாள்) நடந்தது:

தசமி திதி அன்று ஒருவேளை உண்டு இந்திராதி தேவர்களும் அசுரர்களும் மந்திரகிரியை மத்தாகவும், வாசுகி என்ற நாகராஜனைத் தாம்புக் கயிறாகவும் அமைத்தார்கள். அசுரர்கள் தலைப்புறமாகவும், தேவர்கள் வால்புறமாகவும் நின்று அமிர்தம் கடையலானார்கள். கடைந்தபோது வாசுகி நஞ்சை உமிழ்ந்தது. கடலில் இருந்தும் நஞ்சு தோன்றியது. வாசுகி கக்கிய ஆலமும் கடலில் தோன்றிய ஆலமும் ஒன்று சேர்ந்து ஆலாலம் எனப் பேர் பெற்றது. அக்கொடிய விடத்தை வானவர்கள் விருப்பப்படி அடியவர்களாகிய அமரர்கள் உய்ய அமுதம் போல் சிவபெருமான் உண்டருளினார்.

### ஏகாதசி திதியன்று (பதினோராவது நாள்) நடந்தது:

சிவபெருமான் சொற்படி தேவர்கள் மறுபடியும் பாற்கடலைக் கடைந்தார்கள். ஏகாதசியன்று பகல் முழுவதும் பட்டினி இருந்து இரவு முழுவதும் உறக்கமின்றி பாற்கடலைக் கடைந்தார்கள்.

### துவாதசியன்று நடந்தது (பன்னிரண்டாவது நாள்):

துவாதசியன்று அதிகாலையில் அமிர்தம் கிடைத்தது. அதைத் தேவர்கள் பகிர்ந்து உண்டார்கள். அந்த மகிழ்ச்சியில் தேவர்கள் துவாதசியன்று ஆடியும் பாடியும் பொழுதைப் போக்கினார்கள்.

### திரயோதசி அன்று நடந்தது (பதிமூன்றாம் நாள்):

தேவர்கள் சிவபெருமானை முன்னாலே வணங்காது பொழுது போக்கிய தங்கள் குற்றத்தை உணர்ந்து சிவபெருமானிடம் பணிந்து தங்கள் குற்றத்தை மன்னித்தருளுமாறு வேண்டினார்கள்.

பரம கருணாநிதியாகிய சிவபெருமான் மகிழ்ந்து தேவர்களுக்கு அருள் புரியத் திருவுளம் கொண்டு கயிலையில் அன்று மாலை (4.30 மணி முதல் 6.00 மணி வரை.) பிரதோஷ வேளையில் தவத்திரு முன் இருந்த ரிஷப தேவரின் இரு கொம்புகளுக்கிடையில் நின்று அம்பிகையைக் காணத் திருநடம் செய்தருளினார். தேவர்கள் அதனைத்

தரிசித்து சிவபெருமானை துதி செய்து வணங்கினார்கள். அது முதல் திரயோதசி திதியன்று மாலை நேரம் பிரதோஷம் ரஜனீ முக வேளை பாபத்தை போக்கும் நேரம்.

## பிரதோஷ பூஜாபலன்:

சிவ மூர்த்திக்குரிய பல வித விரதங்களில் தலையாயது. இவ் விரதத்தை அநுஷ்டிப்போர் துன்பங்களினின்றும் நீங்கி இன்பத்தை எய்துவர்.

## பிரதோஷ மகிமை:

சிவபெருமான் பிரதோஷ காலத்தில் இடப தேவரின் இரு கொம்புகளுக்கிடையே உயிர்கள் உய்யும் பொருட்டு திருநடம் புரிந்தார். அப்போது சரஸ்வதி வீணை வாசித்தாள். இந்திரன் புல்லாங்குழல் ஊதினார். பிரம்ம தேவர் தாளம் போட்டார். இலட்சுமி தேவி பாடினாள். திருமால் மிருதங்கம் வாசித்தார். தேவர்கள், முனிவர்கள், சித்தர்கள், யக்ஷர்கள், கின்னர்கள், திசை பாலர்கள் முதலிய அனைவரும் வந்து பிரதோஷ காலத்தில் இறைவனை வழிபடுகிறார்கள்.

# வெந்தீ

**பூ**க்கடைக்காரன் நிறைய ஆச்சர்யப் பட்டான். பூக் கட்டிக் கொண்டிருந்தவன் கை சட்டென்று அதை நிறுத்தியது.

''ஏம்மா... கல்யாணம் நின்னு போயிடுச்சா?''

''ம்...''

''யாராச்சும் தவறிட்டாங்களா?''

''ம்ஹூம்...''

வித்யா தலையைக் குனிந்து கொண்டாள். நிமிர்ந்தால் அழுகை வந்து விடும். பூக்காரன் கூர்ந்து பார்த்துக் கொண்டிருந் தான்.

''என்னாச்சும்மா... அப்பா...''

''ஆஸ்பத்திரியிலிருக்கார்... ஹார்ட் அட்டாக்.''

''அதனாலதான்...''

'ஆமாம்' என்கிற தினுசில் தலையை ஆட்டி விட்டு நடந்தாள்.

இப்படித்தான் சொல்ல வேண்டியிருக் கிறது எல்லோரிடமும். நிஜத்தைச் சொல்ல முடியுமா? 'நான் கற்பு இழந்தவள். ஆபீஸில் கண்ணனோடு பிக்னிக் போனவள். முரளி யோடு லாட்ஜில் தங்கியவள். இரண்டு முறை அபார்ஷன் செய்து கொண்டவள்' என்று மாப்பிள்ளை வீட்டில் சொன்னதைச் சொல்ல முடியுமா?

எத்தனை சந்தோஷம் கல்யாணம் நிச்சய மானதும். அப்பாவால் தாங்கியிருக்க முடியாது — கல்யாணம் நின்று போனதை யும் மகள் மேல் சாட்டப்பட்ட குற்றச்சாட் டையும். தாயில்லாத பெண் என்று எல்லா மாயிருந்து வளர்த்த அப்பா. ஸ்நேகிதனாக எல்லாவற்றையும் பகிர்ந்து கொண்ட அப்பா.

ஆபீஸுக்குப் போய் லீவ் எழுதிக் கொடுக்க வேண்டும். பந்தல்காரனிடம் சொல்லி விட்டு, ஆஸ்பத்திரிக்குப் போக வேண்டும். எதிர் வீட்டுப் பாட்டிதான் விழுந்து விழுந்து கவனித்துக் கொள்கிறாள்.

'எந்தாயி... உன்னைப் பத்திச் சொன்ன வுக கட்டைல போக. மேல் வீட்டுக் கல்யாணி மேல இடி விழ. ராசாத்தி... உன் குணத்துக்கு ஏங்கண்ணு இப்படி ஒரு பொல் லாப்பு நடந்து போச்சு?'

ஏன் இப்படி நடந்து விட்டது? தெரிய வில்லை. அத்தனை கல்யாண அழைப்பிதழ் களையும் எரித்து விட்டாள். 'என் மகளாகிய வித்யாவுக்கும் இரு. குமாரசாமியின் மகன் பாஸ்கருக்கும்...' என்று கல்யாணச் சேதி சொன்ன வழுவழுப்பான காகிதம் தீப்பற்றி எரிந்தது. மேலே இருந்து கல்யாணி எட்டிப் பார்த்து விட்டுத் தலையை உள்ளே இழுத் துக் கொண்டாள்.

எதனால் இவள் என்னைப் பற்றிப் பேசினாள் — நாலு பேரைக் கூட்டி வைத்துக் கொண்டு? என் வீட்டுக்கு முரளியும், கண்ண னும், சரவணனும் வருவதைப் பற்றிப் பேசின இவள், ஏன் புஷ்பாவும், சீதாவும், ஜூலியும் வந்ததைப் பற்றிப் பெரிதாகப் பேசவில்லை? அவர்கள் பெண் என்ப தாலா? நேரப் போக்கிற்காகப் பேசி னாளா...

கல்யாணம் நின்று போனதும் அப்பா கல்யாணி மேல் கோபப்பட்டுக் கத்தினார். அப்பா கோபப்படுவதைப் பார்ப்பது அது தான் முதல் தடவை.

''என்ன சொன்னே என் பொண்ணைப் பத்தி? உனக்கு நேரம் போகலைன்னா உன்னைப் பத்திப் பேசியிருக்கலாமே... உன் புருஷனைப் பத்திப் பேசியிருக்கலாமே...''

கல்யாணி திரும்பத் திரும்பத் தான் அப்படிப் பேசவில்லை என்றாள். 'நான் பேச வேணாமாமா?' என்று அப்பாவைப் பார்த் துப் பயந்து சொன்னாள். அப்பா அதற்குப் பிறகு அசாதாரணமாக மௌனமானார். ராத்திரி ஒன்பது மணிக்குக் கொஞ்சம் தயிர் சாதம் சாப்பிட்டார். சாப்பிடும் போதே விக்கிற்று.

''நான் உன்னை நம்புறேன் வித்யா. உன்னை நேசிக்கிறவா உன்னை நம்புறது உனக்குப் போறும்னு இரும்மா...''

நடுராத்திரியில் அப்பாவிடம் இருந்து முனகல் வர எழுந்தாள். அவசர அவசர மாக எதிர் வீட்டுப் பாட்டியின் மகன் டாக்ஸி பிடித்து வர அப்பாவை ஆஸ்பத்திரிக்குக் கூட்டிப் போனாள். ட்யூபும் ஊசியுமாக அப்பா ஆஸ்பத்திரியில் கிடப்பதைப் பார்த் துச் சத்தமாக அழத் தோன்றியது. அப்பா... வெறும் பார்வையாலே பேசுகிற அப்பா. நிச்சயமாக உடைந்து போயிருக்கிறார். மனசால் தாங்க முடியாமல் அவஸ்தைப் பட்டிருக்கிறார்.

**ஆ**பீஸில் கல்யாண அழைப்பிதழ் கொடுக்க வந்திருப்பதாய் நினைத்துக் கொண்டார்கள். முரளியும் புஷ்பாவும் தூரத்திலிருந்தே ''ஹாய்...'' என்றார்கள். சரவணன் இவளைப் பார்த்ததும் எழுந்து வந்தான்.

''என்ன வித்யா... முகத்துல கல்யாணக் களை பொங்குது. பாஸ்கர் எப்படியிருக் கார்? முத கார்ட் எனக்குத்தானே?''

''கல்யாணம் நின்னுடுச்சு சரவணன்.''

சிரித்துக் கொண்டே பேசினவனின் முகம் க்ஷணத்தில் கறுத்தது. பொய்யா

தமயந்தி

நிஜமா என்று நெற்றி ரேகை சுருங்கியது.

"வி...த்யா... என்னாச்சு?"

"அப்பாவுக்கு ஹார்ட் அட்டாக்..."

"எப்போ?"

"முந்தா நேத்து.. கிருஷ்ணா நர்சிங் ஹோம்ல இருக்கார். இப்ப பரவாயில்லை."

"அவர் சரியானதும் கல்யாணம்தானே?"

பூக்கடைக்காரன் கேட்க, யோசிக்க மறந்ததைச் சரவணன் கேட்டான். அப்பாவுக்குச் சுகமில்லை என்றதால் நின்று போன கல்யாணம். அப்பாவுக்குச் சுகமானதும் நடக்க வேண்டும் என்பது நியதிதானே என்கிறான். என்ன சொல்ல இவனிடம் — உண்மையைத் தவிர.

"இல்லை சரவணன். மாப்பிள்ளை வீட்ல கல்யாணத்தை நிறுத்திட்டாங்க."

"ஏன்... எதனால வித்யா?"

"இங்க வச்சு வேணாம் சரவணன்... கேண்டீனுக்குப் போவோமா?"

"ம்..."

வித்யா பேசாமலே நடந்தது சரவணனுக்கு ஆச்சர்யமாய், அதிர்ச்சியாயிருந்தது. இப்படி இவளைப்பார்த்ததேயில்லை. என்னவாயிருக்கும்? கேண்டீனில் அதிகக் கூட்டமில்லை. இரண்டு காப்பிக்கான டோக்கன்களை சரவணன் வாங்கிக்கொண்டான்.

"ம்... சொல்லுங்க வித்யா."

"நான் ஒரு மாதிரின்னு எங்க வீட்டுக்கு மேல இருக்கிறவங்க சொன்னதை அவங்க நம்பிட்டாங்க. தட்ஸ் ஆல்."

"ஒரு மாதிரின்னா...?"

"அதான்... கண்ணனோட பிக்னிக் போறவ. முரளியோட லாட்ஜ்ல தங்கினவ.





"நம்ம நாட்டுக்குச் சண்டை வருமா?"

"ஏன், இப்ப இங்கே இருக்கிற சண்டைங்க போறாதா?"

உங்களோட ஊர் சுத்தறவ. ரெண்டு தடவை கருவைக் கலைச்சிக்கிட்டவ.''

இவளைப் பற்றியா... எத்தனை அன்பாய்ப் பழகுகிற இவளைப் பற்றியா? தாயும் தகப்பனுமில்லாத தன்னிடம் இத்தனை அன்பு செலுத்தி இவள் தகப்பனே, ''மகனே'' என்று நேசித்த இந்தக் குடும்பத்துக்கா இது நேர்ந்தது? வித்யாவின் அப்பா எப்படி இதைத் தாங்கியிருப்பார்?

''பாஸ்கர் கூட நம்பிட்டாரா வித்யா?''

''ம்...''

''எப்படி முடிஞ்சுது அவரால்?''

''நாம நினைக்கிற மாதிரியே எல்லாரும் நினைக்கணும்னு நாம எதிர்பார்க்கக் கூடாதில்லையா சரவணன்?''

''இப்ப என்ன செய்யப் போறீங்க?''

''ஒரு அஞ்சு நாள் லீவ் எடுக்கணும் சரவணன். பூக்காரன்ட்ட சொல்லிட்டேன். எதிர் வீட்டுப் பாட்டியோட மகன், கல்யாண மண்டபம், சமையல்காரன்ட்ட சொல்லிடுறேன்னார். இன்னும் பந்தல்காரன்ட்ட மட்டும்தான் சொல்லணும். ஆபீஸிலிருந்து போகும்போது சொல்லிடலாம்னு நினைச்சேன்.''

எத்தனை வேதனை இவளுக்கு! அன்பு தந்த இந்தக் குடும்பத்துக்கு இந்த நிலையில் நான் என்ன செய்ய — ஆறுதல், அரவணைப்பு, வடிகால் தருவது போதுமா? சரவணன் யோசித்தான்.

''கான்சல் பண்ணவா. வித்யா போறீங்க?''

''ம்...''

''நான் அதைக் கேக்கலே.''

''பின்னே?''

''வித்யா.. உங்களுக்கு விருப்பம்னா எதையும் கான்சல் பண்ண வேண்டாம்.''

சரவணன் தயக்கமாகச் சொன்னான். மனசுக்குள் சில்லென்று ஏதோ பரவிற்று. வித்யாவின் அப்பா ஞாபகம் வந்தது. அந்தக் கண், அன்பு... கடவுளே! அவருக்கு எந்த வேதனையும் கூடாது — இவளுக்கும்...

''என்ன சொல்றீங்க சரவணன்?''

''நான் உங்களைக் கல்யாணம் செய்துக்கறேன்.''

வித்யா சட்டென்று நிமிர்ந்தாள். இதை எதிர்பார்க்கவில்லை என்று கண் சொன்னது.

''பச்சாதாபமா சரவணன்?''

''இல்ல வித்யா... நம்பிக்கையும் அன்பும். நீங்க பாஸ்கரைக் கல்யாணம் பண்ணிக்கப் போறீங்கன்னதும் நான் சந்தோஷப்பட்டது நிஜம். குடும்பம்னா என்னன்னு எனக்குத் தெரிய வச்சதே நீங்களும் உங்கப்பாவும் தான் வித்யா. பாஸ்கர் உங்களை நம்பியிருக்கணும். அந்த நம்பிக்கை உங்க மேலே எனக்கிருக்கு வித்யா. பச்சாதாபத்தாலோ இரக்கத்தாலோ நான் இதைச் சொல்லலை. நீங்க யோசிங்க. மெதுவா பதிலைச் சொல்லுங்க.''

இத்தனை இயல்பாய், லேசாய்ச் சொல்லக்கூடிய விஷயமா இது? சரவணனால் எப்படி முடிகிறது? இவளைக் கல்யாணம் பண்ணிக் கொண்டால் கல்யாணி சொன்னது நிஜம் என்று ஆகி விடாதா? வித்யா நிமிர்ந்து அவன் கண்களைப் பார்த்தாள். அதில் பொய் இல்லை. நாடகத்தனம் இல்லை. நிஜம் இருந்தது. நம்பிக்கை இருந்தது. ஒன்றுமே தீர்மானிக்கத் தோன்றாமல் எழுந்தாள். அப்பா என்ன சொல்வார்? மனசுக்குள் கேள்விகள் கிளை விட்டு எழுந்தன.

''நானும் அப்பாவைப் பார்க்க வர்றேன் வித்யா. இப்ப நீங்க எங்கே போறீங்க?''

''அங்கேதான்.. நடுவுல ஒரு வேலை இருக்கு.''

''லீவ் எழுதிக் கொடுத்திடுவோமா?''

''ம்.''

வித்யா ஐந்து நாளுக்கு லீவ் எழுதிக் கொடுத்தாள். மானேஜர் ''கல்யாண காரியமா?'' என்று சிரித்தார். பதில் சொல்லத் தெரியவில்லை. புஷ்பா ''என்ன வித்யா,.. கார்ட் எப்போ தருவே?'' என்றாள். வெறுமனே சிரிக்க மட்டுமே தோன்றியது.

சரவணன் லீவ் எழுதிக் கொடுத்து விட்டு வந்தான்.

''போவோமா?''

யாரோ ஒருவர் என்னைப் பற்றி அசிங்கமாகப் பேசியதற்கு நான் எதற்காக பலியாக வேண்டும்? எதற்காக மற்றவர்களைப் பற்றி நான் கவலைப்பட வேண்டும்? அப்பா சொன்னது போல் என்னை நேசிக்கிறவன் என்னை நம்புவது போதாதா? சரவணன் என்னை நம்புவது எனக்குப் போதாதா? மாலையும் கழுத்துமாய்க் கல்யாணி முன்னால் என்னை நம்புகிறவனோடு நான் நிற்பது ஜெயமில்லையா?

''சரவணன்... பூக்கடை வரைக்கும் போக வேண்டும்.''

தெரு திரும்பி பூக்கடையில் நுழைந்தாள். பூக்காரன் சரவணனைக் கூர்ந்து பார்த்தான்.

''என்னம்மா?''

''பூவைக் கான்சல் பண்ணக் காலைல வந்தேன். இப்ப... வேணாம். மூவாயிரம் பூ சொன்ன தேதில வேணும்.''

பூக் கடைக்காரன் குழப்பமாகப் பார்த்தான். ''அப்பாவுக்குச் சரியாயிட்டுதாம்மா?''

வித்யா திரும்பினாள். சரவணனைப் பார்த்துச் சிரித்தாள். பூக்காரனிடம் ''சரியாயிடும்'' என்றாள்.

# தனுக்கோடி பாலம்:



# இடித்தால் நல்ல லாபம்!



• முரளீதரன்



• அருணாசலம்

தனுக்கோடியில் அன்றைக்குத் துறை முகம் இருந்ததற்கான சாட்சி, இன்றைக்கும் கம்பீரமாகக் கடலுக்குள் நின்று கொண்டிருக்கும் தனுக்கோடி பாலம்தான். அது 1903 இல் கட்டப்பட்டது. அந்தப் பாலத்தைக் கடல்மேல் தாங்கிக் கொண்டிருக்கும் தூண்கள் வெறும் கற்களாலும் சிமெண்டாலும் கம்பிகளாலும் ஆனவையல்ல; முழுக்க முழுக்க வெள்ளியத்தாலும் காரீயத்தாலும் ஆனவை. கோடிக்கணக்கில் மதிப்பு வாய்ந்தவை.

"அதன் மதிப்புத்தான் அதற்கு ஆபத்தாக இருக்கிறது..." என்று ஆரம்பிக்கிறார் இராமநாதபுரம் மாவட்ட பி.ஜெ.பியின் செயலாளர்முரளீதரன். "அ.தி.மு.க.ஆட்சிக் காலத்தில் அந்தப் பாலத்தை இடிப்பதற்காகக் காண்ட்ராக்ட் விடும் அளவுக்கு வந்து விட்டார்கள். எதற்காக அதை இடிக்க வேண்டும் என்று கேட்டபோது, அது சும்மா தானே கிடக்கிறது என்றார்கள். உண்மை அதுவல்ல; அதை இடித்தால், ஒரு சிறிய தொகையைக் காண்ட்ராக்ட் விட்டதாகக் கணக்குக் காட்டி விட்டுப் பலரும் பல லட்சங்கள் சம்பாதிக்கலாம் என்கிற ஒரே காரணம்தான். ஆனால், இங்குள்ள எங்களைப் போன்ற மற்ற அரசியல் கட்சிகள் சும்மா விடவில்லை. போராடினோம். அப்புறம்தான் அதை இடிக்கும் விஷயத்தை நிறுத்தி வைத்தார்கள். ஆயினும் ஆளுங் கட்சியிலிருப்போருக்கு எப்போதுமே அதில் ஒரு கண் இருக்கத்தான் செய்கிறது!" என்கிறார் முரளீதரன்.

''உண்மையில் பார்க்கப் போனால் அந்தப் பாலம் (முன்பு கப்பலில் சென்று ஏறுவதற்கான பாலம்) இப்போது வெறு மனேதானே நின்று கொண்டிருக்கிறது. அதை இடிப்பதில் என்ன நஷ்டம்?'' இந்தக் கேள்விக்கு மீனவர் சங்கத் தலைவர் அருளா னந்தம் கொஞ்சம் உணர்ச்சி வசப்பட்டு விட்டார்!

''64 இல் அடித்த புயலுக்குப் பிறகு தனுக் கோடி நகரமே காலியாகிவிட்டது உண்மை தான். அதன் பிறகு யாரும் அங்கு போய்ப் பழைய தொழில்களைச் செய்யவில்லை என் பதும் உண்மைதான். இவையெல்லாம் வியா பாரிகளுக்குச் சரி. ஆனாலும், கடல் தாயின் மக்களான மீனவர்கள் அப்படியா? இன்னும் ஐயாயிரம் மீனவர்கள் அந்தத் தனுக்கோடிப் பாலத்திற்கருகிலேயே குடிசைகளைப் போட்டுக் கொண்டிருக்கிறார்களே, அவர் களின் கதி? அப்பகுதியில் கடலலைகளின் உக்கிரத்தையும், காற்றையும் மட்டுப் படுத்தி வைப்பது அந்தப் பாலம்தான். அதனால் தான் அந்த இடத்தில் மீனவர்கள் குடிசை போட்டுக் கொண்டு குடியிருக்கிறார்கள். அப்பாலம் தேவைதானா என்று முடிவு செய்ய அரசு ஒரு குழுவை நியமித்திருக்கிற தாம். இடிப்பது என்று தீர்மானித்தால் மீனவர்கள் எதிர்ப்புத் தெரிவிக்காமல் விட மாட்டார்கள்... அந்தப் போராட்டத்தில் ரத்தம் சிந்தினாலும் வியப்பில்லை'' என்றார் அருளானந்தம்.

''அந்தப் பாலத்தை இடிப்பது ஒருபுறம் இருக்கட்டும். இப்போது தனுக்கோடிக்குப் புனித நீராட வரும் யாத்ரீகர்களின் நிலை என்ன? பாதை இருந்தும் கிட்டத்தட்ட ஆறு கிலோ மீட்டர் தூரத்திற்கு மணலில் நடந்து சென்றுதான் நீராட வேண்டியிருக்கிறது. 64—புயலில் மணல் மூடிய தார்ச் சாலையை இன்று வரை எந்த அரசாங்கமும் சுத்தப் படுத்தவேயில்லை. சுற்றுலா ஆண்டு கொண்டாடும் அரசு முதலில் அதைச் செய்யக்கூடாதா? செய்யாது! ஏன்! அதைச் செய்வதில் அரசியல்வாதிகளுக்கும் அதி காரிகளுக்கும் பிரமாதமாக என்ன லாபம் இருக்கப் போகிறது? தனுக்கோடி பாலத்தை இடித்தால்தானே, அதிலுள்ள உலோகங் களைக் கொண்டு லட்சக்கணக்கில் சம் பாதிக்கலாம்!'' என்றார் கம்யூனிஸ்ட் கட்சியைச் சேர்ந்த தில்லை பாக்கியம்.

ஆக, ஒவ்வோர் ஆணின் வெற்றிக்குப் பின்னாலும் ஒரு பெண் இருப்பாள் என்பது போல், அரசு வகுக்கும் ஒவ்வொரு திட்டத் திற்குப் பின்னாலும் 'கமிஷன்' இருந்தேயாக வேண்டும் போலும்!



— இளங்கோவன்

படங்கள்: சுபா

யோசனை தெரிவித்த வாசகர்:
நெல்லை குரலோன்.



டாக்டர் பதில்கள்:




# மச்சம் என்பது என்ன?

● க. வெங்கடேஷ், சேலம் — 1:

●● 'மச்சம்' என்பதற்கு மருத்துவ ரீதியான விளக்கம் என்ன? அது பிறப்பிலேயே தோன்றுவதா, அல்லது இடையிலும் தோன்றுமா? மறையுமா? மச்சம் பெரிதாகிக் கொண்டே வந்தால், அது புற்றுநோயாகவும் இருக்கலாம் என்பது உண்மைதானா?

●● டாக்டர் சந்திரசேகர சாண்டில்யா, சென்னை — 28:

● மெலானின் பிக்மென்ட் என்பது, நமது தோலுக்கு நிறம் அளிப்பதற்கு உதவுகிறது. ஒரு மனிதன் கறுப்பாகவோ, வெளுப்பாகவோ இருப்பதற்கு இந்த 'பிக்மென்ட்' அதிகமாகவோ, குறைவாகவோ இருப்பது தான் காரணம். தோலில் ஒரே இடத்தில் மெலானின் கூடுவதால் உண்டாவதுதான் மச்சம்; அதாவது கறுப்புப் புள்ளி. இதுவே பழுப்பு நிறத்தில், பரவலாக இருந்தால் காஃபியோலா ஸ்பாட்ஸ் என அழைக்கப்படும். பெரும்பாலான மச்சங்கள் பிறப்பிலேயே தோன்றுவன. சில, இடையிலும் தோன்றலாம். ஆனால் மறையாது. மச்சம் பெரிதாகிக்கொண்டே போனால் அது புற்று நோய்தான் என்பதில்லை. எனினும், 'மெலனோமா' எனும் ஒரு வகைப் புற்று நோய், ஏதோ ஒரு சிலருக்கு, மச்சம் பெரிதாவதால் உண்டாகிறது.

● ஆர். வெங்கடேஷ், குத்தாலம்:

●● மசாஜ் செய்து கொள்வது உடல் நலத்திற்கும், ஆரோக்கியத்துக்கும் உகந்தது தானா?

● மசாஜ் செய்து கொள்வதால், பிடித்து விடப்பட்ட உறுப்புகளுக்கு ரத்த ஓட்டம் அதிகரிக்கிறது. அதனால், தாற்காலிகமாக உடல் வலி குறைகிறது. இதைத் தவிர வேறு எந்த ஒரு நன்மையும் கிடையாது. கால், கை சூம்பிப்போன குழந்தைகளுக்கு, தினமும் தொடர்ந்து பலமாதங்கள் மசாஜ் செய்வதால் தசைகளின் அளவும், வலிமையும் அதிகரிக்கக் கூடும்.

● ஆர். முரளி, சென்னை — 33:

●● புகை பிடிப்பது, புகையிலை போடுவது போன்றவற்றால் புற்றுநோய் வருகிறது. பிளட் கான்சர் என்பது என்ன? எதனால் வருகிறது? எந்தக் கெட்ட பழக்கங்களால் வருகிறது?

● புகையிலை உபயோகிப்பதால் உதட்டில், கன்னத்தின் உட்பகுதியில் புற்று நோய் வரும். புகை பிடிப்பதால் நுரையீரலில் புற்று நோய் வரும். பிளட் கான்சர் என்பது ரத்தத்தில் உள்ள ஒரு சில அணுக்கள் கட்டுக்கடங்காமல் பெருகிவிடுவதால் உண்டாவது. இதற்கும் கெட்ட பழக்கங்கள் எதற்கும் சம்பந்தம் இல்லை.

● ஆர். ராஜேசுவரி, திருச்சி — 14:

●● கடுமையான விஷமுள்ள பாம்புக் கடியைக் குணப்படுத்தவும் மருந்து இருக்கிறதா? பாம்பு கடித்ததும் எவ்வளவு நேரத்தில் சிகிச்சை அளிக்க வேண்டும்?

● கடுமையான விஷமுள்ள பாம்புக் கடியைக் குணப்படுத்த முடியும். Anti-Snake Venomஎனும் மருந்தை இரத்தத்தில் செலுத்தி, விஷத்தை முறித்துவிடலாம். ரத்தத்தை உறையவிடாமல் தடுக்கும் முறையிலும், நரம்புகளைத் தளர வைத்தும் பாம்பின் விஷம் நம் உடலைத் தாக்குகிறது. பாம்பு கடித்தவுடன் மயக்கமடைவது, பெரும்பாலும் அச்சத்தினால்தான். கூடவே ரத்த அழுத்தம், நாடித்துடிப்பு இவை திடீரெனக் குறைவதால் மூர்ச்சை ஏற்படலாம். இதை ஷாக் எனலாம். தாங்க முடியாத வலியினால் இந்த நிலை ஏற்படக் கூடும். பாம்பு கடித்த ஒரு சில மணி நேரங்களுக்குள்ளாக, சிகிச்சை அளித்தாக வேண்டும். எவ்வளவு விரைவாகச் சிகிச்சை அளிக்கப்படுகின்றதோ, அவ்வளவு தூரத்துக்குச் சிகிச்சை வெற்றி பெறும்.

தொகுப்பு: **எஸ். வி. என்.**

# சுப சோதனை

குளிக்கும்போது சீட்டி அடித்துப் பாடினேன்.

உள்ளே ஜீவிதாவின் நினைவு- அதுதான் இத்தனை உல்லாசம்.

அப்போது அப்பா நினைவுக்கு வந்தார். நன்றி பீறிட்டது என்னுள். எனது காதலை அங்கீகாரம் பண்ணியவர் அல்லவா?

அம்மா முனகினாள். எதிர்க் கொடி பிடித்தாள். ஆனால், அப்பா விடவில்லை. அம்மாவை மடக்கி என் அணிக்கே வலுச் சேர்த்தார்.

அடுத்தமாதம்கல்யாணம்என்றுநிச்சயம் கூடப் பண்ணியாயிற்று.

குளியலை முடித்து வெளிப்பட்ட போது போஸ்ட்மேன், ஒரு தபாலை விசிறிவிட்டுப் போனார்.

அப்பாவின் கடிதம்.

மனத்தில் மகிழ்வலைகள் பொங்கித் ததும்பிட மடலை விரித்தேன்.

கல்யாணச் சேதியோடு ஒரு வேண்டுகோளும் எழுதப்பட்டிருந்தது.

சின்ன வயதில் நான் நலம் குன்றியிருந்த போது, என்னைப் பெற்றவள் திருச்செந்தூர் முருகனுக்கு வேண்டுதல் பண்ணியிருந்தாளாம். பால் காவடி எடுப்பதாக வேண்டுதல். இதுவரை செலுத்தப் பெறாமல் தட்டிக் கொண்டே வந்து விட்டதால், இப்போது திருமணத்திற்கு முன்பு அந்த வேண்டுதலைச் செலுத்திவிட வேண்டும் என்றும், அதற்காகத் தொடர்ச்சியாக நான்கு நாட்கள் விடுப்பு எடுத்துக் கொண்டு வரும்படியும் எழுதியிருந்தார்.

சிரித்தேன். நான் பால் காவடி எடுக்க வேண்டுமா? என்ன மூடத்தனம்! எப்போதோ உடல்நலமில்லாமல் இருந்ததற்கு, இப்போது போய் வேண்டுதல் என்கிற பெயரால், நானும் மூடத்தனம் உடையவனே என்று நிரூபிப்பது போல்... பால் காவடி எடுப்பதா?

ஊஹூம், ஒரு நாளும் நடவாத காரியம் இது. இதை லெட்டரில் எழுதினால் சரிப்பட்டு வராது. அதனால், நேரிலேயே போய் அவர்களை, குறிப்பாக அம்மாவைச் சரி செய்ய வேண்டும் என்று எண்ணினேன்.

போனேன்.

என்னைக் கண்டதும் அம்மாவின் சந்தோஷம் எல்லை மீறி நின்றது. அவளின் வேண்டுதலை நிறைவேற்றவே நான் புறப்பட்டு வந்திருப்பதாய் அவளின் எண்ணம்.

அவளே திட்டங்கள் வகுத்தாள்.

"என்னங்க, நம்ப ஜெகதீசனுக்குச் செவ்வாய்க் கிழமை காவடி எடுத்துடலாம். அது முருகனுக்கு உகந்த நாள். சனி, ஞாயிறு, திங்கள் மூன்று நாட்களும் விரதம் இருக்கட்டும். இப்ப நீங்க நேரே திருச்செந்தூர் போய், நம்ப கட்டளை ஐயரைப் பார்த்து வேண்டிய ஏற்பாடுகளைப் பண்ணிட்டு வாங்க. ஓதுவார் மூலம் காவடி கட்ட ஏற்பாடு பண்ணுங்க. அப்படியே, என்னென்ன வேணும்னு சாமான்களோட லிஸ்டையும் வாங்கிட்டு வந்துட்டா, எல்லாத்தையும் ரெடி பண்ணிடலாம். வேண்டுதல் செலுத்த யாரையெல்லாம் அழைச்சுட்டுப் போறது? சம்பந்தி வீட்டாருக்குச் சொல்லணுமா?" என்று கேட்டாள் அம்மா.

அவளிடம் ஒரே பரபரப்பு.

"ஜெகதீஷ், எத்தனை நாட்கள் லீவு போட்டிருக்கே? காவடி எடுக்க ஏற்பாடு பண்ணிடலாமில்லே? இப்ப நான் திருச்செந்தூர் போய் வந்துடவா?" என்று அப்பா கேட்டார்.

"அதுக்கு அவசியம் வராதுப்பா" என்றேன் நான் வெகுநிதானமாக.

அவர்கள் அதிர்ந்து போனதன் அடையாளம் முகங்களில் வெளிறலாய் வெளிப்பட்டது.

"என்னடா இப்படிச் சொல்றே?" பதறிய குரலில் அம்மா கேட்டாள்.

"இப்ப நான் லீவு எடுத்திட்டும் வரலே, இனிமே எடுக்கப் போறதும் இல்லே."

"என்னடா சொல்றே?" இப்போது அப்பா கேட்டார்.

"அப்பா, நான் இப்ப நேர்ச்சை, வேண்டுதல் இதொண்ணையும் பண்ணப் போறது இல்லே..."

"அப்ப... பிறகு பண்ணப் போறியா?"

"எப்பவுமே பண்ணப் போறதில்லே..."

"டேய்... டேய்... என்னடா சொல்றே? நேர்ந்துக்கிட்ட நேர்ச்சைக் கடனை வச்சுக்கிட்டுக் கல்யாணம் பண்ணக் கூடாதுடா..."

"பண்ணினால் என்னவாம்?"

"சாமி குற்றம் வரும்டா."

"அப்பா, இதெல்லாம்மூடத்தனம்னு நம்புறவன்ப்பா நான். இதுக்காக வீண் செலவு பண்ணவும், லீவு எடுத்து நேரம் ஒதுக்கவும் நான் சுத்தமாய் விரும்பலேப்பா..."

"டேய்... டேய்... எதுடா மூடத்தனம்? எதுடா வீண் செலவு? ஆண்டவனை வேண்டிக்கிறதும், அந்த வேண்டுதலை நிறைவேத்தறதும் மூடத்தனமா? வீண் செலவா?"

"நிச்சயமாய், இப்ப நீங்க வேண்டிக்கிட்ட காவடி நேர்ச்சையை சிம்பிளாய்ப்

உமாகல்யாணி

பண்ணினால் கூட என்ன செல வாகும்?''

''ரெண்டாயிரமாவது ஆகும்...'' என்று குறுக்கிட்டாள் அம்மா.

''இந்த ரெண்டாயிரமும் தண்டச் செலவு தானே?''

''வாயைக் கழுவுடா. ஆண்டவனுக்குப் பண்றது செலவில்லே. வரவு.''

''போம்மா, ரெண்டாயிரம் கையை விட்டுப் போறது செலவுதானே? எப்படி வரவாகும்?''

''அப்படின்னா, ஆண்டவனுக்கு அபிஷேகம் பண்றது. அலங்காரம் பண்றது. தீபம் ஏற்றுவது. மேளங்கள் முழங்க ஆராதனை பண்றது எல்லாம் வேஸ்டுன்னு சொல்றி யேண்டா?''

''வாழ்க்கைல அனுபவிக்கத்தான்.''

''வாழ்க்கையை அனுபவிக்க நம் நாட்டுக் கைத்தறி உடைகள், நம் நாட்டில் தயாராகும் பெர்ஃப்யூம்ஸ், வகைகள்லாம் ஆகாதா? இதை யூஸ் பண்றவங்களெல்லாம் வாழ்க்கையை அனுபவிக்கலேன்னு சொல்றியா? கதரை மட்டுமே யூஸ் பண்ற நான் சந்தோஷமாய் இல்லேன்னு சொல்றியா?''

''அது... அவங்கவங்க மனோபாவத்தைப் பொறுத்தது.''

''அப்ப... எளிய டிரஸ்... எளிய வாழ்விலே எல்லாம் கூட மனநிறைவை அனுபவிக்கிறவங்க இருக்கிற போது. எக்கச்




சக்கமாய்ச் செலவு பண்ணித்தான் அனுபவிக்கணும்னு இல்லியே...''

''அதான் சொல்லிட்டேனே அது மனோபாவத்தைப் பொறுத்த மேட்டர்ன்னு.''

''அதேதாண்டா இங்கே எங்க பக்கமும். எளிமையிலும் சந்தோஷப்பட வழிகள் இருக்க, நீ படாடோபத்தில்தான் சந்தோஷம் இருக்குன்னு செலவு பண்ணிச் சந்தோஷப்படுற மாதிரி, நாங்களும் எங்க சந்தோஷத்துக்காகக் கொஞ்சம் செலவு பண்ணக் கூடாதா? நீ சிகரெட் பிடிச்சு ஆனந்தமடைஞ்சா, நாங்க அபிஷேகம் பண்ணி ஆனந்தமடைகிறோம். நீ செலவு பண்ணிச் சினிமாப் பார்த்து ஆனந்தப் பட்டா, நாங்க செலவு பண்ணி சுவாமிக்கு அலங்காரம் செய்து பார்த்து ஆனந்தப்படுகிறோம். ஆனந்தப்படுறதுக்காக... ஆத்ம திருப்திக்காக... நாங்க ஒரு வழியிலே

யாடா?'' அம்மா கேட்டாள்.

''நிச்சயமாக'' என்றேன்.

''அதனாலே மனசுக்கு எவ்வளவு நிம்மதியும் சந்தோஷமும் கிடைக்குது தெரியுமாடா?''

''அதுக்காக ரூபாய் ரெண்டாயிரத்தை வேஸ்ட் பண்ணலாமா?''

இப்படிக் கேட்ட என் மீது அப்பாவின் பார்வை ஆழ அகலங்களுடன், வித்தியாசமாய் விழுந்து வெட்டியது.

''அப்படின்னா, ஆத்ம திருப்திக்காகப் பண்ற செலவெல்லாம் வேஸ்டுங்கிறியாடா?''

''ஆமாம்ப்பா...''

''இப்ப நீ ஃபாரின் வாட்ச் போட்டிருக்கே. ஃபாரின் டிரஸ்தான் யூஸ் பண்றே. ஃபாரின் இன்டிமேட், பவுடர் சோப்ன்னு யூஸ் பண்றே. அடிக்கடி சினிமாப் போறே.

செலவு பண்றோம். நீ வேற வழியிலே பண்றே. இதுல சினிமா பார்த்து, சிகரெட் பிடிச்சு ஆனந்தப்படுறதுல வர்ற கேடுகள் இடையாது. ஆத்மாவும் மனசும் புனிதமாய்ச் சந்தோஷப்படுறது மேலானதா இல்லியான்னு நீயே ஒரு முடிவுக்கு வா. இது மூட நம்பிக்கையோ, இல்லையோ... எங்க மனசு சந்தோஷப்படுகிற விஷயம்...'' என்றபடி என்னைப் பார்த்தார் அப்பா.

மறுபடியும் அவரே, ''இதோ பார் ஜெகதீசா, இது ஒருவிதமான ஆத்மசோதனை. ஆண்டவன் வந்து நேர்ச்சை பண்ணச் சொல்றதுமில்லே, நேர்ச்சை பண்ணாட்டிக் கேக்கிறதுமில்லே. இது நம்ம வாக்கை நாமே காப்பாத்துறமான்னு நமக்கு நாமே வச்சுப் பார்க்கிற சுயசோதனைடா. கண் எதிரே தென்படாத ஒருத்தருக்கு நாம் கொடுத்த வாக்கைக் காப்பாற்றி, நான் நாணயமானவன்தான்னு தனக்குத் தானே நிருபணம் பண்ணிக்கிறதுதாண்டா இந்த நேர்ச்சை செலுத்தற சமாச்சாரமெல்லாம். அம்மா இப்பத் துடிக்கிறதும் தன்னோட நாணயத்தையும், கொடுத்த வாக்கையும் காப்பாத்திக்கிறதுக்குத்தாண்டா. என்னிக்கோ ஆண்டவனுக்குத் தந்த வாக்கைக் காப்பாற்ற உன்கிட்டே யாசகம் கேட்கிறாடா! நீ என்ன சொல்றே? வாக்கு நாணயத்தைக் காப்பாத்தறது கூட மூட நம்பிக்கைதாம்பான்னு சொல்லிடப் போறியா?'' என்று கேட்டார்.

நான் புன்னகை செய்தேன்.

அவர்களுக்கு இசைவான புன்னகை!

# தம்பக்கரை தங்கய்யா



இடுப்பில் வேஷ்டியும், மேலே வெற்று மார்பில் தேர்ந்தெடுத்த 'டை'யும் கட்டிக் கொண்டால் எப்படி இருக்கும்? பதில்: தம்பக்கரை தங்கய்யா போல இருக்கும்!

பிரபுதான் தங்கய்யா. சரி, அதென்ன தம்பக்கரை? கேட்பவர்களுக்கு: ஊரின் அல்லது பக்கத்துக் காட்டின் பெயர். இல்லையில்லை; தம்பத்தைக் கரை சேர்ப்பதால் கிடைக்கும் காரண ஆகு பெயர்! காரணம் கதைக்கு உதவுகிறதோ இல்லையோ எதுகை மோனைக்கு உதவுகிறது.

குடிகார அப்பாவின் பொறுப்பான ஆனால் வாயாடிப் பெண், கனகா. ஊரின் முரட்டு விவசாய இளைஞன் பிரபு. இருவருக்குள்ளும் பாட்டுக்கு எதிர்ப்பாட்டு. ஊரசல், கனகாவின் காதல் வெற்றி எனச் சம்பவங்கள் துவங்குகின்றன. இயற்கையான உரையாடல்கள். உபயம்: ராஜா ரவிவர்மா. ஆனால் வசனங்களில் ஆணாதிக்கம்தான் நெருடல்.

'பெண் துயில் ஆண் துயில்' — என அந்தப் பொடியன் பேசுவது அசட்டு வழிசல். மற்றொரு அநாவசியம் நம்பியார். அவர்தான் தண்டனையாகக் காலில் வெட்டுப்பட்டு விட்டாரே அப்புறம் என் காட்டில் தலைமறைவு வாழ்க்கை?

எஸ். எஸ். சந்திரன், செந்தில் குழு நகைச்சுவையில் மாறுதல் இல்லை. ஆனால் வழக்கமான கிராமியக் காதலுடன் திருத்தி விடும் கங்கை அமரன் இந்த முறை ஊர்ப் பிரச்னை என்கிற திருப்பம் வைத்து, விரோதம், பழிக்குப் பழி, தொடர் கொலைகள் என சுருள் சுருளான சண்டைக்குச் சந்தர்ப்பம் தந்து நமக்குப் பழக்கமில்லாத புது ஃபார்முலாவில் முயற்சி செய்திருக்கிறார். செய்யட்டும். ஆனால் அத்தனை சுலபமாக இல்லாமல் 'த்ரில்' சேர்த்திருக்க வேண்டாமா?

இரண்டு முளைத்த முறுக்கு மீசைப் பூசாரி கோவில் திருவிழா நடத்தி வைப்பது மற்றொரு வருத்தம். அதுவாவது போகட்டும். பிரபுவைக் கைது செய்யும் காட்சியில் சதாம் உசேனை மடக்குவது போல் அத்தனை ஆட்கள் தேவையா?

ஆறுதல்: இளையராஜாவின் இசை.

— சுந்தர்ஜி.

# சிவகாமியின் சபதம்



ஏழாம் அத்தியாயம்

## சின்னக் கண்ணன்

ஆயனரும் பரஞ்சோதியும் பேசிக் கொண்டிருக்கையில், வாசற்படியருகில் நின்ற கண்ணபிரான் சமிக்ஞை செய்ததைச் சிவகாமி கவனித்தாள் என்று சொன்னோமல்லவா? சற்று நேரத்துக்கெல்லாம், பேசிக் கொண்டிருந்தவர்களின் கவனம் தன் மீது செல்லாதபடி, சிவகாமி மெல்ல நடந்து, வீட்டுக்கு வெளியே வந்தாள்.

''அண்ணா! என்னை அழைத்தீர்களா? ஏதாவது விசேஷம் உண்டா?'' என்று கேட்டாள்.

''ஆமாம்; உண்டு!'' என்றான் கண்ணன்.

''கமலி அக்கா ஏதாவது சொல்லியனுப்பினாளா?''

கண்ணபிரான் குரலைத் தாழ்த்திக் கொண்டு, ''அதோ உள்ளே வந்திருக்கிறாரே, அந்த வாலிபருக்கு உடனே விஷம் கொடுத்துக் கொல்லும்படி சொல்லச் சொன்னாள்'' என்றான்.

சிவகாமி, ''இதென்ன வேடிக்கை அண்ணா? எதற்காக விஷம் கொடுக்க வேண்டும்?'' என்று புன்னகையுடன் கேட்டாள்.

''அம்மணி! விஷம் கொடுப்பது வேடிக்கையான விஷயமா?''

''இல்லை, அதனால்தான் 'எதற்காக' என்று கேட்கிறேன்.''

''மாமல்லருக்கு இவர் போட்டியாக வந்திருக்கிறார், தாயே!''

''என்னத்தில் போட்டி?''

''இராஜ்யத்துக்குத்தான்! ஊரிலே எல்லாம் சொல்லிக் - கொள்ளுகிறார்கள். 'சக்கரவர்த்தி, பரஞ்சோதியைத் தத்து எடுத்துக் கொண்டு விட்டார்; பரஞ்சோதிக்குத்தான் இராஜ்யத்தைக் கொடுக்கப் போகிறார்! மாமல்லருக்கு இராஜ்யம் இல்லை' என்று.''

''ஆஹா! இது மட்டும் உண்மையாயிருந்தால்....?''

''தங்கச்சி, அப்படி நேர்ந்தால் உனக்கு அதில் மிக்க சந்தோஷம் போலிருக்கிறதே?'' என்றான் கண்ணபிரான்.

''அப்படித்தான், அண்ணா! இந்த இராஜ்யந்தானே எனக்கும் அவருக்கும் குறுக்கே நிற்கிறது? எனக்கு அவரும் அவருக்கு நானும் இருந்தால் போதுமே! இராஜ்யம் என்னத்திற்கு!''

''எல்லாப் பெண்களும் ஒரே மாதிரிதான் போலிருக்கிறது! கமலி கூட இப்படியேதான் சொல்கிறாள்.''

''என்ன சொல்கிறாள்!''

''நீ இப்போது சொன்னது போலத்தான் சொல்கிறாள். 'கண்ணா! உனக்கு நானும் எனக்கு நீயும் போதாதா? அரண்மனைச் சேவகம் என்னத்திற்கு! வா! எங்கேயாவது கிராமத்துக்குப் போய் நிம்மதியாயிருக்கலாம்' என்கிறாள்.''

''அப்படிச் செய்யப் போகிறீர்களா.

அமரர் கல்கி

அண்ணா?''

''அப்படிச் செய்வதில் எனக்கும் இஷ்டந்தான். ஆனால், சின்னக் கண்ணன் குறுக்கே நிற்கிறான்.''

''அது யார் அண்ணா, சின்னக் கண்ணன்?''

கண்ணன் கண்ணைச் சிமிட்டிக் கொண்டு, ''கொஞ்சம் மூளையைச் செலுத்தி யோசித்துப் பார், தங்கச்சி!'' என்றான்.

சிவகாமி, ''என்னத்தை யோசிக்கிறது?'' என்றாள்.

''இவ்வளவுதானா தங்கச்சி? இவ்வளவு புத்திசாலியாயிருந்தும் சின்னக் கண்ணன் யார் என்று கண்டுபிடிக்க முடியவில்லையே?'' என்று கண்ணன் கேட்டு விட்டு, இன்னும் தாழ்ந்த குரலில், ''சின்னக் கண்ணன் கமலியின் வயிற்றில் இருக்கிறான்'' என்று கூறிப் புன்னகை புரிந்த போது, அவன் முகத்தில் அசடு வழிந்தது.

கமலி கர்ப்பமாயிருக்கிறாள் என்பதைச் சிவகாமி தெரிந்து கொண்டு, ''அப்படியா அண்ணா! சந்தோஷம்'' என்றாள். அவள் உடம்பை அப்போது என்னவோ செய்தது. கமலியை உடனே பார்க்க வேண்டும். அவளைக் கட்டிக் கொள்ள வேண்டும் என்ற ஆசை உள்ளத்தில் உண்டாயிற்று.

கண்ணபிரான், ''தங்கச்சி, அந்தச் சந்தோஷத்தை நீ நேரிலேயே வந்து சொல்லி விட்டால் தேவலை. கமலிக்கு இன்னும் கொஞ்சகாலம் காஞ்சியை விட்டுப் புறப்பட முடியாதாம். தங்கச்சியிடம் சொல்வதற்கு என்னவெல்லாமோ சமாசாரம் மூட்டை கட்டி வைத்திருக்கிறாளாம்!'' என்றான்.

''எனக்கும் அக்காவைப் பார்க்க ஆசைதான், அண்ணா! ஆனால் அது எப்படி முடியும்?'' என்றாள் சிவகாமி.

''ஆமாம், தங்கச்சி! முடியாதுதான்! அதனால்தான் நான் கூடக் கமலியிடம் சொன்னேன். அவர்களெல்லாம் நம்முடைய ஏழைக் குடிசையில் வந்து தங்கியிருப்பார்களா என்று....''

''அண்ணா! அப்படிச் சொல்ல வேண்டாம். நீங்களும் கமலியும் இருக்கும் இடத்தில் ஏழைமை ஏது?.... உங்களுடைய குடிசை எனக்கு அரண்மனையை விட ஆயிரம் மடங்கு மேல்...'' என்று சொல்லி வந்தவள், சட்டென்று நிறுத்தினாள். ஏதோ ஓர் எண்ணம் குறுக்கிட்டு அவளைத் தடை செய்ததாகத் தோன்றியது.

''அதற்கென்ன பார்த்துக் கொள்ளலாம், அண்ணா! அப்பாவிடம் சொல்கிறேன்... வேறு ஒன்றும் விஷயமில்லையா?'' என்றாள்.

''அப்படியொன்றும் பெரிய விஷயமில்லை. ஒரே ஒரு சின்ன விசேஷம் மட்டும் உண்டு; இன்று காலை நான் ரதத்தை ஓட்டிக் கொண்டு போய் அரண்மனை வாசலில் நிறுத்தியதும், மாமல்லர் என்னைத் தனியாகக் கூப்பிட்டார். 'பிரபு, என்ன விசேஷம்?' என்று கேட்டேன். 'ஒன்றுமில்லை, கண்ணா! இராத்திரி தூங்கவில்லை' என்றார். 'அதுதான் முகத்தைப் பார்த்தால் தெரிகிறதே. ஏன் தூங்கவில்லை?' என்றேன். 'புது தளபதியுடன் பேசிக் கொண்டிருந்தேன்' என்றார். 'அவ்வளவு தானா?' என்று கேட்டேன். 'அப்புறம் ஓலை எழுதினேன்' என்றார். 'யாருக்கு' என்றேன். 'அப்பாவுக்கு' என்று சொன்னார். 'சரி' என்றேன். பிறகு மெல்ல மெல்ல, 'இன்னோர் ஓலையும் எழுதினேன்' என்றார்.''

''அண்ணா! ஓலையைக் கொடுங்கள்'' என்று சிவகாமி கேட்ட போது, அவள் தொண்டையை அடைத்துக் கொண்டது.

''கொடுக்கிறேன், தங்கச்சி! கொடுக்கிறேன்! ஆனால், ஓலையை வாங்கிக் கொண்டதும் நீ ஓடிப் போய் என்னைத் திண்டாட்டத்தில் விட்டு விடக் கூடாது...''

''என்ன திண்டாட்டம், அண்ணா?''

''போன தடவை மாமல்லரின் ஓலையை வாங்கிக் கொண்டதும் ஒரே ஓட்டமாய் ஓடிப் போய் விட்டாயல்லவா? அதனால் எனக்கு எவ்வளவு சங்கடமாய்ப் போய் விட்டது தெரியுமா! 'ஓலையை வாங்கிக் கொண்டதும் சிவகாமி என்ன செய்தாள்? அவள் முகம் எப்படி இருந்தது? கண் எப்படியிருந்தது?' என்றெல்லாம் மாமல்லர் கேட்ட போது நான் விழித்தேன்...''

''போதும், அண்ணா. வேடிக்கை! ஓலையைக் கொடுங்கள்!''

இன்னும் கொஞ்சம் வேணுமென்றே தவக்கம் செய்து விட்டுக் கடைசியாகக் கண்ணபிரான் ஓலையை எடுத்துக் கொடுத்தான்.

அப்புறம் ஒரு கணநேரங்கூட அங்கே சிவகாமி நிற்கவில்லை. வீட்டின் வலப் பக்கத்தில் சென்ற பாதை வழியாகப் பழைய தாமரைக் குளத்தை நோக்கி விரைந்து சென்றாள்.



"ஒரே லேடீஸ் ஸ்பெஷலா வருதுடா. பேசாம, நாம லேடீஸாப் பொறந்திருக்கலாம்..."

# நாகம் சீறுகிறது!

ஆரண்யத்தினால் சூழப்பட்ட தாமரைக் குளக்கரையில், மகிழ மரத்தினடியில் போட்டிருந்த மரப் பலகைச் சிங்காதனத்தில் சிவகாமி அமர்ந்து, தன் மார்புக் கச்சில் சேர்த்துச் செருகியிருந்த ஓலையை எடுத்தாள்.

"பொல்லாத ஓலையே! பல்லவ குமாரரின் காதல் என் உள்ளத்தைக் குத்திப் புண் செய்வது போதாதென்று நீயும் என் நெஞ்சைக் குத்துகிறாயா?" என்று சொல்லிக் கொண்டே, அந்த ஓலையைக் கண்ணிலே ஒற்றிக் கொண்டாள். பிறகு சற்றுத் தயங்கி, சட்டென்று தன் செவ்விதழ்களில் அதை ஒரு தடவை வைத்து எடுத்து விட்டு, வெறுமையாயிருந்த மேல் ஓலையை அப்புறப்படுத்தினாள். உள் ஏட்டில் முத்துப் போல் பொறித்த அழகிய சின்னஞ் சிறு எழுத்துக்கள் காணப்பட்டன. கண்களில் ஆர்வம் ததும்பச் சிவகாமி படிக்கத் தொடங்கிய போது, "அக்கா! அக்கா!" என்று பின்னாலிருந்து வந்த சப்தத்தைக் கேட்டுத் திடுக்கிட்டாள். திரும்பிப் பார்த்தால், அந்த மரச் சிங்காதனத்தின் கைப்பிடி மீது ஒரு பச்சைக் கிளி உட்கார்ந்து அவளைக் கூர்ந்து கவனித்துக் கொண்டிருந்தது!

கிண்கிணி ஒலிப்பது போல் சிவகாமி கலகலவென்று சிரித்து விட்டு, அந்தக் கிளியைப் பார்த்து, "சுகப் பிரம்ம முனிவரே, உமக்கு என்ன இங்கே வேலை? இளம் பெண்கள் தனிமையாக இருக்கும் அந்தப்புரத்துக்குள் ரிஷிகள் வரலாமா? அதிலும், பூஜை வேளையில் கரடி புகுந்தது போல், ஒரு கன்னிப் பெண் தன் காதலரின் ஓலையைப் படிக்கப் போகும் தருணத்திலா நீர் வந்து சேருவது? போம்! போம்!" என்று கையை ஓங்கி வீசிய போது, அந்தக் கை வீச்சானது, கன்னத்தை நெருங்கி வரும் காதலனுடைய கரத்தைத் தள்ளும் அபிநயமாகவே தோன்றியது.

அதற்கேற்றாற்போல் அந்தச் சுக மகா முனிவரும், "மாட்டேன்! மாட்டேன்!" என்றார்.

சிவகாமி மறுபடியும் சிரித்து விட்டுக் கூறினாள்: "வேஷதாரி ரிஷியே! கதைகளிலே வரும் அரசிளங் குமரிகள் எல்லாரும் அந்தப்புரத்தில் உம்மை வைத்துக் கொண்டு எப்படித்தான் இரகசியம் பேசினார்களோ, தெரியவில்லை! இருக்கட்டும், இருக்கட்டும்; நான் பல்லவ இராஜ்யத்தின் மகாராணியாகும் போது, உங்களுக்கெல்லாம், அரண்மனையில் இடமில்லாமல் செய்து விடுகிறேன்..."

அப்போது அந்த விஷமம் நிறைந்த சுகப் பிரம்மம், "மாமல்லா! மாமல்லா!" என்று உச்சஸ்தாயியில் கீச்சுக் குரலில் கத்திற்று.

"ஓஹோ! அப்படியா சேதி? நான் அந்தப்புரத்திலிருந்து உங்களைத் துரத்தியடித்தால், மாமல்லரிடம் சலுகைக்குப் போவோம் என்று சொல்கிறீரா? நடக்காது முனிவரே, நடக்காது! பல்லவ சிங்காதனத்திலே சிவகாமி தேவி அமர்ந்தவுடனே முதல் காரியமாக, அந்த ராஜ்யத்திலே சோம்பித் திரியும் ஆண்டிகள், பிக்ஷுக்கள் காவித் துணி தரித்த சந்நியாசிகள், மண்டை ஓட்டு மாலை அணிந்த காபாலிகர்கள் இவர்களையெல்லாம் நாட்டை விட்டு ஓட்டி விடப் போகிறாள். யோக்கியமாகக் கல்யாணம் செய்து கொண்டு இல்லறம் நடத்துகிறவர்களுக்குத்தான் பல்லவ இராஜ்யத்தில் அப்புறம் இடம் இருக்கும், தெரியுமா? நான் இந்த ஓலையைப் படிக்கும் வரையில் உம்முடைய திருவாயை மூடிக் கொண்டு சும்மா இரும்....!"

சும்மா இருக்க முடியாது என்பது போல், சுகர், "ரதி! ரதி!" என்றார். சிவகாமி திரும்பிப் பார்த்தாள். அங்கே ரதி துள்ளி ஓடி வந்து கொண்டிருந்தது.

"ரதி! அந்தப்புரத்துக்குத் தகுந்த சகி நீதான். எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டு வாயைத் திறக்காமல் மௌனமாயிருப்பாய். இந்த ரிஷியோ எதையும் அரையும் குறையுமாய்க் கேட்டுக் கொண்டு நாலு பேர் இருக்கும் போது மானத்தை வாங்கி விடுவார்! இந்த வேஷதாரி முனிவர் இங்கிருந்து தொலைந்து போன பிறகு உனக்கு மாமல்லரின் ஓலையைப் படித்துக் காட்டுகிறேன், ரதி!"

இவ்விதம் கூறி, ரதியின் மோவாய்க் கட்டையைத் தடவிக் கொடுத்து விட்டுச் சிவகாமி மீண்டும் ஓலையைப் பார்த்தாள். கையிலே பணியாரத்தை வைத்துக் கொண்டிருக்கும் குழந்தை, அதைச் சாப்பிட்டால் ஆகிப் போய் விடுமே என்ற பயத்தினால் தயங்குவது போல் சிவகாமியும், ஓலையைப் படிக்கும் இன்பத்தைத் தள்ளிப் போட்டுக் கொண்டேயிருந்து கடைசியில் படிக்கலானாள். ஓலையில் பிராகிருத பாஷையில் எழுதியிருந்தது வருமாறு:

"பாரத நாட்டில் புகழ்பெற்ற சிற்ப சக்கரவர்த்தியின் செல்வக் குமாரியும், சௌந்தரிய

தேவதை அடிபணிந்து போற்றும் சுகுமாரியும், பரத நாட்டிய சாஸ்திரம் வலம் வந்து தொழுது வணங்கும் கலைவாணியும், மாமல்ல பல்லவனின் இருதய சிம்மாசனத்தில் கொலு வீற்றிருந்து தனியரசு புரியும் மகாராணியும் ஆகிய சிவகாமி தேவிக்கு:

இனிமேல் ஓலை எழுத மாட்டேன். நானே நேரில் வந்து விடுவேன் என்று முன் ஓலையில் எழுதியிருந்தேன். அதற்கு மாறாக இதை நான் எழுதுவதற்கு இரண்டு காரணங்கள் உண்டு.

என் ஆருயிரே! முந்தாநாள் இரவு நான் ஒரு கனவு கண்டேன். அதை நினைத்தாலே என் தேகமெல்லாம் சிலிர்க்கிறது. கற்பனைக்கு எட்டாத இன்பம் நிறைந்த அந்த அதிசயக் கனவைக் கேள்:

கனவிலே நான் தூங்கிக் கொண்டிருந்தேன். ஆகாய வெளியில் அந்தரத்தில் காற்



றுப் படுக்கையில் மிதந்து கொண்டே தூங்கியதாகத் தோன்றியது. அந்த அதிசயமான சொப்பனத் தூக்கம் எதனாலோ திடீரென்று கலைந்தது. கண்களை விழித்துப் பார்க்க முயன்றேன். ஆனால், ஏற்கெனவே கண்கள் விழித்துத்தானிருந்தன. மேலும் கீழும் நாற்புறமும் ஒரே காடாந்தகாரமாயிருந்தபடியால், என் கண்கள் திறந்திருந்தும், மூடியிருந்தனவோ என்று நான் ஐயப்பட நேர்ந்தது.

உன் கண் இமையில் தீட்டிய மையைக் காட்டிலும் கரியதாய் என்னைச் சுற்றிலும் படர்ந்திருந்த அந்த அதிசயமான இருட்டைப் பற்றி நான் சிந்தித்துக் கொண்டிருக்கையில், எனக்குச் சற்று மேலே வட்ட வடிவமான ஓர் ஒளி தோன்றக் கண்டேன். வர வர அந்த ஒளி வட்டம் அகன்று கொண்டு வந்ததோடு, அதன் ஜோதியும் அதிகமாகி வந்தது. கண்களைக் கூசச் செய்யாமல் குளிர்ந்து விளங்கிய அந்தப் பொன்னிற ஒளி வர வர என்னை நெருங்கி நெருங்கி வந்ததைக் கண்டேன்.

அருகே வந்ததும், அந்த ஒளி வட்டம் உன்னுடைய திவ்யவதனந்தான் என்று தெரிந்தபோது, எனக்குண்டான வியப்பையும் களிப்பையும் எவ்வாறு சொல்வேன்?

சிவகாமி! விரைவிலே உன்னுடைய உருவம் முழுவதுமே தெரிந்தது. எல்லையில்லா அந்தகாரத்தின் நடுவில் உன் பொன் உருவத்தைப் பார்க்கப் பார்க்க, எனக்கு ஒரு விசித்திரமான எண்ணம் உதயமாயிற்று.

உன்னுடைய உருவமானது சாதாரண மனித தேகத்தைப் போல் இரத்தம், சதை, எலும்பு, தோல் இவைகளினால் ஆனதாக எனக்குத் தோன்றவில்லை. நிலாமதியின் இளங் கதிரையும் மல்லிகைப் பூவின் இன்ப மணத்தையும், அன்னப் பட்சியின் இறகிலுள்ள மென்மையையும், செவ்வழி ராகத்தின் இன்னிசையையும் கலந்து உன் தூய திருமேனியைப் பிரமன் படைத்திருக்க வேண்டுமென்று கருதினேன்.

இவ்வாறு நான் உன் மேனி அழகாகிய மதுவை அருந்தி மயங்கி நிற்கையில், நீ என் அருகே நெருங்கி வந்தாய். என் முகத்துக்கு வெகு சமீபத்தில் உனது பொன் முகத்தைக் கண்டேன். காலையில் மலர்ந்த குவளை மலர்களில் பனித்துளி நிற்பது போல் உன் நீண்ட கண்களின் முனையில் இரு கண்ணீர்த் துளிகள் நின்றன. உன்னுடைய மூச்சுக் காற்று என் முகத்திலே பட்டது.

அவ்வளவு அருகில் வந்திருந்த உன்னைத் தழுவி அணைத்துக் கொள்ள வேண்டுமென்று என்னுடைய தேகத்தின் ஒவ்வோர் அணுவும் துடிதுடித்தது. ஆனாலும், நான் அவ்விதம் செய்யவில்லை.

என் உள்ளத்தில் ஒரு சந்தேகம் தோன்றியிருந்தது. உன்னைத் தொட்டேனானால், உன் திருமேனியானது நிலாமதியின் கதிராகவும், மல்லிகையின் மணமாகவும், அன்னப் பட்சியின் மென்மையாகவும், செவ்வழியின் இன்னிசையாகவும் தனித்தனியே பிரிந்து மறைந்து விடுமோ என்ற பயம் ஏற்பட்டிருந்தது.

இந்தப் பயத்தை அறிந்து கொண்டவளைப் போல நீ உன் செவ்விதழ்கள் சிறிது அகல, முத்துப் போன்ற பற்களின் நுனி தெரிய, நறுநகை புரிந்தாய்! உன் பொன் வதனம் என்னை அமுதபோதையில் ஆழ்த்திக் கொண்டு இன்னும் அருகே நெருங்கிற்று.



## அருள்வாக்கு

**நா**னும் சரி, மற்றவர்களும் சரி, எவ்வளவு பேசினாலும் லெக்சரால் கல்ச்சர் (பண்பாடு) வளராது. படிப்பதாலும் வளராது. நமக்கென்று காரியத்தில் பின்னி வைத்திருக்கிற அனுஷ்டானங்களைப் பண்ணினால்தான் சித்த சுத்தி ஏற்பட்டு, நாம் படிப்பதில் ஸாரம் எது என்று புரிந்து கொண்டு அதைக் கிரஹித்துக் கொண்டு கல்ச்சரை வளர்க்க முடியும். பிற தேச விஷயங்களில் எதை எடுத்துக் கொள்வது என்று பரிசீலித்து முடிவு செய்வதற்கு அஸ்திவாரமாக முதலில் நம் சாஸ்திரப்படி வாழ முயற்சி பண்ண வேண்டும்.

நான் சொல்கிறபடி மாறுவது ஒன்றும் பெரிய கஷ்டமில்லை. ஒரே ஓர் அம்சத்தை மட்டும் நாம் பிடிவாதமாக மாற்றிக் கொண்டு விட்டால் இது ஸாத்யம்தான். ''பணம்தான் பிரதானம்'' என்பதே அந்த அம்சம். பணமே குறி என்று நாம் இறங்கின பிற்பாடுதான் ஆசாரங்கள், வித்யா ஞானம் எல்லாமே போய் விட்டன. நம் தேசத்தில் பணம் முக்கியமாய் இருந்ததேயில்லை. லௌகிக வாழ்க்கையை ஆத்ம அபிவிருத்திக்கு உபயோகமாகமட்டும்வைத்துக்கொள்வதுதான் நம்முடைய தேசாசாரம்.

பணப் பேராசை போய்விட்டால் சாஸ்திரோக்தமான ஆசாரங்களோடு வாழ்ந்து எல்லா வித்யைகளையும் சாஸ்திரங்களையும் ஆர்வத்தோடு படித்து, விவேகத்தோடு ஸாரத்தைக் கிரஹித்துக் கொண்டு நாமும் வளர்ந்து, நம் பண்பாட்டையும் வளர்த்து வாழ்விக்க முடியும். இப்படி நம் தேசம் பூர்வத்தில் இருந்தபடி லோகத்துக்கு வழிகாட்டியாக இருப்பதற்கு எல்லோரும் அடக்கத்தோடு பகவானைப் பிரார்த்தனை பண்ணிக் கொண்டு, நம்மாலான பிரயத்தனங்களைப் பண்ணுவோம்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

ஆ, என்ன சொல்வேன் என் துரதிர்ஷ்டத்தை! அந்தச் சமயத்தில் எங்கேயோ ஒரு நாகப் பாம்பின் சீறல் கேட்டது. சட்டென்று திரும்பிப் பார்த்தேன். ஒரு மரக்கிளையில் இரண்டு பட்சிகள் உட்கார்ந்து, ஒன்றின் மூக்கை ஒன்று தொட்டும், 'கலகல'வென்று சப்தித்தும் விளையாடிக் கொண்டிருந்தன. அந்த மரத்தின் அடிக் கிளையிலிருந்து ஒரு நாகப் பாம்பு – கருநிறமும் மஞ்சள் நிறமும் கலந்த உடலுடைய நீண்ட பாம்பு – அந்தப் பட்சிகள் இருந்த கிளையை நோக்கிச் 'சரசர'வென்று ஏறிக் கொண்டிருந்தது. அந்த நாகத்தின் சீறலைத்தான் நான் கேட்டதாகத் தெரிந்து கொண்டேன். அந்தக் கணத்தில் உன்னைக் கூட மறந்து, என் உடைவாளை அவசரமாய் எடுத்தேன்.

அவ்வளவுதான்; விழித்துக் கொண்டேன்.

என் கண்ணில் வளரும் பெண்ணரசியே! சொப்பனங்களிலும் அவற்றின் பலன்களிலும் நம்பிக்கை இல்லாதவன் நான். ஆனாலும் இந்தக் கனவுக்கு ஏதாவது அர்த்தம் உண்டா என்று அடிக்கடி என்னையறியாமல் எண்ணம் உண்டாகிறது. உனக்கு ஏதேனும் அபாயம் வருமென்பதைக் குறிப்பிடுகிறதோ என்று ஐயுறுகிறேன்.

யுத்தம் நெருங்கி வருகிறபடியால் நீ ஜாக்கிரதையாயிருக்க வேண்டும்; ஆனால், எவ்விதக் கவலையோ, பயமோ வேண்டாம். என் கையிலே வாள் இருக்கும் வரையில் உனக்கும் உன் தந்தைக்கும் அபாயம் எதுவும் நேராது.

பொழுது விடியப் போகிறது. கீழ்வானம் வெளுக்கிறது. நான் சொல்ல விரும்பிய இன்னொரு செய்தியைச் சுருக்கமாகச் சொல்லி முடித்து விடுகிறேன்.

எனக்கு ஒரு புதிய தோழன் கிடைத்திருக்கிறான். அவன் யார் தெரியுமா? மதயானை மேல் வேல் எறிந்து உன்னையும் உன் தந்தையையும் காப்பாற்றிய வீர வாலிபன்தான். அவனைக் கோட்டைக் காவலுக்காகச் சக்கரவர்த்தி அனுப்பியிருக்கிறார். நேற்றிரவெல்லாம் நானும் அவனும் பேசிக் கொண்டிருந்தோம்; பெரும்பாலும் உன்னைப் பற்றியே பேசிக் கொண்டிருந்தோம்.

சக்கரவர்த்தியிடமிருந்து உங்களுக்கு அவன் சேதி கொண்டு வருகிறான். நீங்கள் காஞ்சிக் கோட்டைக்காவது வந்து விட வேண்டும், அல்லது சோழ நாட்டுக்குப் போய் விட வேண்டும் என்று சக்கரவர்த்தி சொல்லியனுப்பியிருக்கிறார். ஆனால் நான் அங்கு வந்து உங்களைப் பார்த்துப் பேசும் வரையில் அதைப் பற்றி ஒரு முடிவும் செய்ய

# நீங்கள் தமிழக சுற்றுலா நிபுணரா? – போட்டி முடிவு

**சரியான விடைகள்:**

1. காஞ்சிபுரம் — 3
2. சென்னை — 1
3. வேடந்தாங்கல் — 5
4. சிதம்பரம் — 9
5. பழனி — 13
6. தஞ்சாவூர் — 11
7. பாண்டிச்சேரி — 6
8. ராஜபாளையம் — 15

எட்டு விடைகளையும் சரியாக எழுதிய மூன்று பேருக்குப் பரிசுத் தொகை ரூ. 250 பகிர்ந்தளிக்கப்படுகிறது.

பரிசு பெறுவோர்: 1. க. இராமலிங்கம், 24, பேட்டை வீதி, புதுப்பேட்டை அஞ்சல், தெ. ஆ. மாவட்டம் — 607 108; 2. என். விஜயராகவன், 23-B, பயனியர் நகர், ஜோதிபுரம் அஞ்சல், கோயமுத்தூர் — 641 047; 3. க. நாராயணசாமி, 69, நான்காவது குறுக்குத் தெரு, கனகசபை நகர், சிதம்பரம் — 608 001.

---

வேண்டாம்.

யுத்தம் நெருங்கி வருகிறதானது ஒரு காரியத்துக்கு ரொம்பவும் நல்லதாயிருக்கிறது. கூடிய சீக்கிரம் எனக்கு விடுதலை கிடைத்து விடும். கோட்டைக்கு வெளியே போகக்கூடிய நாள் விரைவிலே வரும். அந்த நாள் வந்தவுடன் நான் நேரே அங்கு வந்து உன்னைப் பார்த்து விட்டு வேறு காரியங்களைக் கவனிப்பேன்.

என் செல்வமே! ஒவ்வொரு சமயம் நினைத்தால் இந்த இராஜ்யம் என்னத்திற்கு, யுத்தம் என்னத்திற்கு என்றெல்லாம் தோன்றுகிறது. இதெல்லாம் சொப்பனமாயிருக்கக் கூடாதா? திடீரென்று கண் விழித்து எழுந்ததும், நான் சக்கரவர்த்தி குமாரன் இல்லை, உன் தகப்பனாரிடம் சிற்பக் கலை கற்றுக் கொள்ளும் சீடன் என்று ஏற்பட்டால், எவ்வளவு ஆனந்தமாயிருக்கும்? அப்போது உனக்கும் எனக்கும் இடையே ஒரு தடையும் இராதல்லவா? இவ்வாறு எட்டு மாத காலமாக உன்னை வந்து பார்க்காமல் இருந்திருப்பேனா?''

ஓலையை ஒரு தடவை முழுதும் படித்த பின்னர், இன்னொரு தடவையும் சிவகாமி படித்தாள். பிறகு ரதியைப் பார்த்து, ''ரதி, பல்லவ குமாரரிடமிருந்து வந்த ஒவ்வோர் ஓலையையும் உனக்குப் படித்துக் காட்டினேன் அல்லவா? இந்தத் தடவை முடியாது! படித்துக் காட்டினாலும் உனக்கு விளங்காது!'' என்றாள்.

பிறகு ஓலையை எடுத்துக் கொண்டு, பின்னால் இருந்த மகிழ மரத்தின் மேல் இரண்டு அடி ஏறினாள். மேலே கிளைகள் முளைத்திருந்த இடத்தில் காணப்பட்ட பொந்தில் கையை விட்டுத் திரும்ப எடுத்த போது அவளுடைய கையில் ஏழெட்டு ஓலைகள் இருந்தன. அந்த ஓலைகளை ஒவ்வொன்றாய் எண்ணிப் பார்த்து விட்டுத் தன்னிடமிருந்ததையும் சேர்த்து மறுபடியும் பொந்திற்குள் வைத்து விட்டுக் கீழே இறங்கினாள்.

''ரதி! வா! போகலாம்; சுகப்பிரம்ம ரிஷியே! வாரும்; வீட்டுக்குப் போகலாம். அப்பா சாப்பிடக் காத்துக் கொண்டிருப்பார். மாமல்லரின் ஓலையைப் படித்துக் காட்டவில்லையென்று என் பேரில் கோபமா? நாளைக்கு வந்து உங்கள் இருவருக்கும் படித்துக் காட்டுகிறேன். நாளைக்கு மட்டுந்தானா? என் வாழ்நாள் உள்ள வரையில் ஒவ்வொரு நாளும் படித்துக் காட்டுவேன். ரதி! குமார சக்கரவர்த்தியைப் பற்றி நீ என்ன நினைத்துக் கொண்டிருக்கிறாய்? சுகமகாமுனிவரே! மாமல்லர் மகாகவி என்பதைத் தெரிந்து கொள்ளுவீராக. காளிதாசனையும் பாரவியையும் போன்ற பெரிய கவி மாமல்லர். அவருடைய கவிதைக்குப் பாத்திரமான பெண் யார் தெரியுமா? இந்த ஏழைச் சிற்பியின் மகள் சிவகாமிதான்!'' — இவ்விதம் ரதியுடனும் சுக முனிவருடனும் மாறி மாறிப் பேசிக் கொண்டே சிவகாமி வீட்டை நோக்கிச் சென்றாள்.

காட்டு மரங்களுக்குள்ளே சிவகாமி மறைந்ததும், தாமரைக் குளத்தின் அருகில் இருந்த மற்றொரு பெரிய மரத்தின் மறைவிலிருந்து நாகநந்தி அடிகள் வெளிப்பட்டார். அவர் மெல்ல நடந்து வந்து, சிவகாமி ஓலைகளை ஒளித்து வைத்த மரப் பொந்திலிருந்து அவற்றை எடுத்தார். ஒவ்வொன்றாக அவற்றை விரைவாகப் பிரித்துப் படிக்கத் தொடங்கினார். அவ்விதம் வாசித்து வந்த போது அவர் விட்ட பெருமூச்சானது, நாகப் பாம்பின் சீறலைப் போலத் தொனித்தது.

(தொடரும்)

# ஒரேயொரு முறை...

ராத்திரி பத்து ஆயிற்று. பத்தரை ஆயிற்று. மனோவை இன்னும் காணோம். ப்ரியா மனசு நிலைகொள்ளாமல் தவித்தாள். வாசலுக்கும் உள்ளுக்குமாய் நடை பழகினாள்.

சாதாரணமாய் ஐந்து ஐந்தரைக்கு ஆபீஸ் முடிந்து ஆறுக்கெல்லாம் வந்து விடுவான். திருமணமான இந்த ஒரு மாத காலத்தில் இதுதான் வாடிக்கை. இன்று மட்டும் ஏன் இன்னும் வரக் காணோம்? காலை ஆபீஸுக்குக் கிளம்பும் போது கூட ஒன்றும் சொல்லவில்லையே?

பக்கத்து வீட்டில் மணி பதினொன்று அடித்தது. அந்தத் தனிமை, அந்த அகால நேரம் ப்ரியாவுக்குள் லேசாய்ப் பயத்தைக் கொடுத்தது. மனோவின் மேல் கொஞ்சம் ஆத்திரம் வந்தது. மனைவி வீட்டில் தனியாய் இருப்பாளே என்று கொஞ்சமாவது பொறுப்பு இருக்கிறதா? வரட்டும்! மெலிதான கோபத்தில் பற்களைக் கடித்தாள்.

நேரம் ஆக ஆக மனத்துக்குள் கவலை அரித்தது. என்ன ஆயிற்று இவருக்கு? ஏதேனும் விபரீதம்? ப்ரியாவின் கண்களுக்குள் அழுகை எட்டிப் பார்த்தது.

காலடிச் சப்தம்! மனோதானா? ப்ரியா ஆர்வமாய் வாசலை நோக்கித் திரும்பினாள். அங்கே நின்று கொண்டிருந்த மனோவைப் பார்த்ததும் 'விருட்'டென்று பாய்ந்து



அவனைக் கட்டிக் கொண்டு அவன் மார்பில் முகம் புதைத்து விசும்ப ஆரம்பித்தாள்.

''ஏன் இத்தனை லேட்? நான் பயந்து போயிட்டேன் தெரியுமா?''

''நிஜமாகவா?'' மனோவின் குரல் ஏனோ குழறியது. கால்கள் தள்ளாடின. மூச்சுக் காற்றில் ஏதோ துர்வாடை வீசியது. குடித்திருக்கிறான்!

ப்ரியா 'விசுக்'கென்று அவனிடமிருந்து உதறிக் கொண்டாள். விழிகளில் ஆவேசத்துடன் மனோவின் தோள்களைப் பற்றி உலுக்கினாள்.

''குடிச்சிருக்கீங்களா?''

''கொஞ்சம்தான். இன்னிக்கு மட்டும்.''

''பொய். எத்தனை நாளா இந்தப் பழக்கம்? சொல்லுங்க. எத்தனை நாளா இந்தப் பழக்கம்?''

மனோ நிற்க முடியாமல் தள்ளாடினான்.

''இல்ல ப்ரியா. இன்னிக்கு மட்டும்தான். ஆபீஸ்ல ராகவனுக்கு ப்ரமோஷன் வந்திருக்கு. அதான் பார்ட்டி கொடுத்தான்.''

''பார்ட்டிதானே கொடுத்தார். பாட்டிலுமா கொடுத்தார்?''

''நான் வேணாம்னுதான் சொன்னேன் ப்ரியா. ஆனா அவுங்க கேட்கலை. சத்தியமா இதுதான் கடைசி ப்ரியா. இனிமே குடிக்க மாட்டேன் ப்ரியா...'' உளறலாய்ச் சொல்லிவிட்டுத் தள்ளாடித் தள்ளாடி நடந்து படுக்கையில் மனோ கவிழ்ந்து கொள்ள, ப்ரியா முதல் தடவையாக அழ ஆரம்பித்தாள்.

அதிகாலையில் கண்விழித்த மனோவுக்கு லேசாய்த் தலையை வலித்தது. வழக்கமாய் அவன் மார்போரம் ஒரு பூங்கொத்தாய்ச் சுருண்டிருக்கும் ப்ரியாவை இன்று காணோம். எங்கே போனாள்?

''ப்ரியா! ப்ரியா.''

மனோவின் குரலைக் கொஞ்சமும் பொருட்படுத்தாமல், ப்ரியா முகம் சிவக்க ஆத்திரத்துடன் துணிமணிகளை சூட்கேஸில் திணித்துக் கொண்டிருந்தாள். மனோ தவித்துப் போனவனாய்ப் படுக்கையிலிருந்து எழுந்து ஓடிப்போய் அவள் கைகளைப் பற்றிக் கொண்டான்.

''ப்ரியா! எங்கே போறே?''

''எங்கம்மா வீட்டுக்கு.''

''எதுக்கு?''

''ஒரு குடிகாரர்கிட்ட இருந்து குடும்பம் நடத்த என்னால் முடியாது.''

''ப்ரியா! ஆயிரம் தடவை மன்னிப்புக் கேட்டுக்கறேன். இனிமே நான் குடிக்க மாட்டேன்.''

''நோ. எனக்கு நம்பிக்கையில்லை. நான் போறேன்.''

''வேணாம் ப்ரியா. சொன்னாக் கேள்.''

''மாட்டேன். வழிவிடுங்க. இனி உங்களுக்கும் எனக்கும் எந்த பந்தமும் இல்லை. டைவர்ஸுக்கு லாயர் நோட்டீஸ் வரும். தயாரா இருங்க. குட்பை!''

கையில் சூட்கேஸுடன் தெருவில் இறங்கி விடுவிடுவென நடக்க ஆரம்பித்தாள்.

சூட்கேஸுடன் வந்து நின்ற ப்ரியாவைப் பார்த்ததும் அம்மா ஆச்சர்யப்பட்டாள்.

''என்னடி திடீர்னு? மாப்பிள்ளை எங்கே?''

ப்ரியா சூட்கேஸைக் கட்டிலில் வீசிவிட்டு அம்மாவை மார்போடணைத்துக் கொண்டு அழ ஆரம்பித்தாள்.

''அவரைப் பத்திப் பேசாதம்மா. நம்மை நல்லா ஏமாத்திட்டார். ராத்திரி ஆபீஸ் பார்ட்டின்னு குடிச்சுட்டுத் தள்ளாடித் தள்ளாடி வந்தார். விடிஞ்சதும் சண்டை போட்டுக் கிட்டுக் கிளம்பி வந்துட்டேன். இனி நான் அங்கே போக மாட்டேன்.''

''ஏண்டி? இந்தச் சின்ன விஷயத்துக்கா கோபிச்சுக்கிட்டு வந்துட்டே?''

''எதும்மா சின்ன விஷயம்? அவர் பாட்டுக்கு இனி தினம் தினம் குடிச்சுட்டு வருவார். நான் பொறுத்துக்கணுமா? நோ! என்னால முடியாது. குடிகாரங்களைத் திருத்தவே முடியாதும்மா?''

அம்மா ப்ரியாவின் தலையைக் கோதிவிட்டாள்.

''அப்படிச் சொல்லாதே ப்ரியா. சொன்னால் நீ நம்பமாட்டே. எனக்குக் கல்யாணமான புதிதில் உங்கப்பா என்னமாக் குடிப்பார், ரகளை பண்ணுவார் தெரியுமா? உன் புருஷனாவது ஆபீஸ் பார்ட்டிங்கிறதுனால குடிச்சார். ஆனால், உங்கப்பா ஆபீசுக்கு லீவு போட்டுட்டுக் குடிப்பார்.''

''நம்ம அப்பாவாம்மா?''

''ம். அப்ப நீ சின்னக் குழந்தை. உனக்குத் தெரிந்திருக்காது. அப்போ அவரை விட்டு நான் விலகி வந்திருந்தால் இந்தக் குடும்பமே இல்லாமல் போயிருக்கும். அவரைக் கொஞ்சம் கொஞ்சமா என் அன்பாலே மாற்றி, நல்ல மனுஷராக்கிட்டேன். எல்லாமே நம்ம கையிலதாம்மா இருக்கு. இப்ப உங்கப்பாவைப் பார்த்தால் ஒரு காலத்தில் அவர் குடிகாரரா இருந்தார்னு உன்னால் நம்ப முடியுதா? குடிக்கிறது தப்புன்னு எடுத்துச் சொல்லு. உன் புருஷனும் கேட்பாரு. தெரிஞ்சோ, தெரியாமலோ தப்புச் செய்தவங்க திருந்தறதுக்கு ஒரு சான்ஸாவது தர வேண்டாமா? அப்படித் தராம நீ இப்படி ஓடி வர்றது நியாயமா?'' என்றாள்.

ப்ரியா அம்மாவை நம்பிக்கையாய்ப் பார்த்தாள். சூட்கேஸை எடுத்துக் கொண்டு வந்த வழியே திரும்பினாள்.

ராத்திரி அப்பாவிடம் அம்மா சொன்னாள்:

''நீங்க குடிகாரர்னு ப்ரியாகிட்ட நான் சொன்னது பொய்தான். ஆனால் அவள் எத்தனை நம்பிக்கையோடு போனாள் தெரியுமா!''

கே. கந்தவேல்

# ஆகாசத் தாமரை

**ம**ஞ்சுளா வீட்டுக்குத் திரும்பிய போது, மாடியிலிருந்து ஆபேரி அவளை வரவேற்றது. துருவ்வின் மனம் குதூகலத்தில் ஆழ்ந்திருக்கிறது என்பதை அவ்விசை தெரிவித்தது.

அவள் சோபாவில் உட்கார்ந்ததும், உத்தம்சிங் அவளருகே வந்து மிகவும் பணிவாகக் கேட்டான்: ''மெம் சாஹேப், காப்பி?''

''கொண்டு வா. துருவ் வெளியே போக வில்லையா?''

''இல்லை, மெம் சாஹேப், மதியம் இரண்டு மணியிலிருந்து வீணை வாசித்துக் கொண்டிருக்கிறார்.''

மஞ்சுளா கைக்கடிகாரத்தைப் பார்த்தாள். ஏழு மணி. மை காட்! ஐந்து மணி நேரமாகவா வாசித்துக் கொண்டிருக்கிறான்! அவள் அவன் அறையை நோக்கிச் சென்றாள்.

துருவ்வின் கண்கள் ரசனையில் மூடியிருந்தன. அவள் சிறிது நேரம் மெய்மறந்து நின்றாள். அவள் கண்களும் தாமாகவே மூடின.

திடீரென்று இசை நின்றது. அவள் கண்களைத் திறந்தாள். துருவ் அவளைப் பார்த்துக் கொண்டிருந்தான்.

''அஞ்சு மணி நேரமா வாசிக்கிறதா உத்தம் சிங் சொன்னானே?'' என்றாள் மஞ்சுளா.

அவன் வீணையைக் கீழே வைத்தான். பதில் கூறாமல் ஜன்னல் வழியாக ஆகாயத்தை நோக்கினான்.

அவள் திவானில் உட்கார்ந்தாள். உத்தம் சிங் காப்பி கொண்டு வந்து, அவளெதிரே வைத்தான்.

''துருவ், உனக்கு?'' என்றாள் மஞ்சுளா. வேண்டாமென்பதற்கடையாளமாக துருவ் தலையை அசைத்தான்.

மஞ்சுளா காப்பிக் கோப்பையைக் கையில் எடுத்துக் கொண்டே கேட்டாள்: ''நான் உன்னை ஒன்று கேட்கலாமா?''

என்னவென்று அறிய விரும்புவது போல், துருவ் அவளைப் பார்த்தான்.

''நாளைக்கு... நீ நேத்திக்கிச் சொன்னதி னாலே,... நம் வீட்டிலேயே உன் கச்சேரிக்கு ஏற்பாடு செஞ்சிருக்கேன். இஸ் இட் ஓகே?''

''நான் ஒண்ணும் நேத்திக்குக் கச்சேரிக்கு ஏற்பாடு செய்னு சொல்லவேயில்லையே!''

''எல்லாரும் கேட்கும்படியா வாசிக்கிறேன்னு நீ நேத்திக்குச் சொல்லலே?'' என்று கேட்டாள் மஞ்சுளா.

''எப்போன்னு நான் ஒண்ணும் சொல்லலே... வாசிக்கிறேன்னு சொன்னேன், அவ்வளவுதான்.''

''லுக், துருவ்... ஐ ஆம் ஸாரி... நீ சொன்னதைத் தப்பாப் புரிஞ்சுண்டு நான் சில ஃப்ரெண்ட்ஸை நாளைக்குக் கூப்பிட்டிருக்கேன்... ப்ளீஸ், டோன்ட் லெட் மி டௌன்... ப்ளீஸ்.''

''உன் 'ப்ரெண்ட்ஸை' நான் என்டர்டெய்ன் பண்ணணும், அப்படியா?''

''நான் அப்படிச் சொல்லவேயில்லே. நீ உன் இஷ்டப்படி வாசி... இன்ஸிடென்டலி சில பேர் அங்கே இருப்பாங்க, அவ்வளவு தான்...''

''எந்தச் சில பேர்? நீ கூப்பிடற சில பேர்!''

''ஓகே... நான் கூப்பிடறவங்கதான்... அவங்க யாரையும் உனக்கு அறிமுகப்படுத்தலே, போறுமா?''

துருவ் பேசாமலிருந்தான்.

''என்ன, நாளைக்கு வாசிக்கறியா?'' என்றாள் மஞ்சுளா.

''சரி'' என்று அவன் வேறு ஏதோ யோசனையில் ஆழ்ந்தவன் போல் பதில் சொன்னான்.

''எத்தனை மணிக்கு?''

எழுந்தவன், 'சடக்'கென்று அவள் பக்கம் திரும்பினான். ''லுக்... 'நீ இஷ்டப்படி எப்படி வேணும்னாலும் வாசி'ன்னு சொல்லிட்டு, இதை ஏதோ ஒரு 'ஷெட்யூல்ட் ப்ரோக்ராம்' மாதிரி ஆக்கப் பாக்கறியே, இது நன்னாருக்கா? ஐ ஆம் நாட் கோயிங் டு என்டர்டெய்ன்: டு யு அண்டர்ஸ்டாண்ட்?''

''ஐ ஆம் ஸாரி. கேட்டது தப்பு. உன் இஷ்டப்படி வாசி.''

துருவ் போட்டுக் கொண்டிருந்த சட்டையைக் கழற்றிக் குர்தாவை எடுத்து அணிந்து கொண்டான். அவன் வெளியே போக ஆயத்தமாகிறான் என்று அவளுக்குத் தெரிந்தது.

''சாப்பிட வருவியா, நான் காத்திண்டிருக்கலாமா?''

''காத்திண்டிருக்க வேணாம். நாம எப்போ ஒண்ணாச் சாப்பிட்டிருக்கோம்?''

''அது என் தப்பில்லே...''

''எதுவுமே யாருடைய தப்புமில்லே. உனக்குப் பசிக்கிறது, நீ சாப்பிடறே, எனக்குப் பசிக்கிறது, நான் சாப்பிடறதுங்கிற மாதிரி,

இந்திரா பார்த்தசாரதி

என்ன ஸ்டுபிட் ஃபார்மாலிட்டி வேண்டியிருக்கு?''

''மனுஷன் ஒரு 'சோஷல் அனிமல்'னு சொல்லுவா. அது தப்புன்னு நீ சொன்னா, சரி.''

''டோன்ட் ட்ரை டு பி சர்காஸ்டிக்... மனுஷன், 'அனிமல்'தான்; ஆனா 'சோஷல்'னு சொல்லிண்டு தன் 'அனிமல் நேச்சரை' மறைக்கப் பார்க்கிறான். நான் மந்தையிலிருந்து விலகி நிக்கற ஆடு...''

''இதுதான் உன் 'ட்ராஜெடி...'' என்றாள் மஞ்சுளா.

''நோ... இது எப்போ 'ட்ராஜெடி'ன்னு நினைக்கிறேனோ, அப்போ மந்தையில இருக்கிறதைச் சொர்க்கமா நினைக்கிறேன்னு அர்த்தம். மந்தையிலிருந்து விலகி ஆடா இருக்கிறதிலிருந்து தப்பிச்சுக்கலாம்னு பார்க்கிறேன்.''

''அப்படி முடியாட்டா, நீ ஓநாயா மாறிடக் கூடிய ஆபத்துமிருக்கு...'' என்றாள் அவன் அம்மா சிரித்துக் கொண்டே.

''இல்லேன்னு சொல்லலே... நீங்களாம் ஜாக்கிரதையா இருக்கணும்...'' என்றான் துருவ்.

இதை அவன் வேடிக்கையாகச் சொல்லவில்லை என்பது அவன் குரலினின்றும் தெரிந்தது. இது அவளுக்குச் சிறிது அச்சத்தைத் தந்தது.

துருவ் கீழே இறங்கி வந்ததும், உத்தம் சிங் கேட்டான்: ''சாஹேப்... சாப்பாடு?''

துருவ் பதில் கூறவில்லை.

ஆட்டு மந்தைகள்தாம், சந்தேகமில்லை. இவர்கள் எல்லாருக்கும் சாப்பாட்டுப் பிரச்னைதான். வேறு எந்தக் கவலையுமில்லை. எட்டரை மணிக்கு இரவு சாப்பிடாவிட்டால், உலகம் தடம் புரண்டு போய்விடும்... உத்தம் சிங் அவனாகக் கேட்கவில்லை. அவன் கேட்க வேண்டுமென்று அவன் எஜமானி எதிர்பார்க்கிறாள். தன் கடமையைச் செய்து விட்டதாகவும், சாஹேப் பதில் சொல்லவில்லையென்றும் அவன் மெம் சாஹேப்பிடம் கூறியாக வேண்டும்...



அவன் காரை 'ஸ்டார்ட்' செய்ததும், ஒரு பெரிய இடி இடித்தது. வானத்தைப் பார்த்தான். மழை பெய்யக் கூடும்.

சிறிது தூரம் சென்றதும், சந்தேகத்துக்கிடமின்றி நல்ல மழை பெய்யத் தொடங்கியது. நவம்பர் துவக்கம். லேசாகக் குளிர ஆரம்பித்து விட்டது. 'ஷால்' போர்த்திக் கொண்டு வந்திருக்கலாமென்று அவனுக்குத் தோன்றியது.

'டிஃபன்ஸ் காலனி சென்றடைந்த போது, தில்லி முழுவதையுமே வானம் குளிப்பாட்டி விட்டாற் போல் அவனுக்குப் பட்டது. சந்தியா வீட்டு வாசலில் காரை நிறுத்தினான்.

சந்தியா வீட்டிலிருப்பாளா? ஃபோன் செய்துவிட்டு வந்திருக்கலாம். ஆனால் அவள் அவனை எதிர்பார்க்காத போது, திடீரென்று அவள் வீட்டுக்குச் சென்று அவளை ஆச்சர்யமடையச் செய்வதுதான், அவளைச் சந்தோஷத்திலாழ்த்தக் கூடும்.

காரிலிருந்து இறங்கி, வாசலுக்குச் சென்று 'பெல்'லை அழுத்துவதற்குள் உடம்பு முழுவதும் நனைந்து விட்டது.

சந்தியாவின் அப்பா வீட்டிலிருக்கிறார் என்பதற்கு அடையாளமாக, அவர் கார் வாசலில் நிறுத்தி வைக்கப்பட்டிருப்பதை அவன் பார்த்தான். சந்தியாவுக்கென்று 'மாருதி' இருந்தது. ஆனால் அவள் அதை உபயோகிப்பதாகத் தெரியவில்லை. அநேகமாக ஸ்கூட்டரில்தான் போவாள்...

கூர்க்கா கதவைத் திறந்தான். "சந்தியா இல்லையா?" என்று கேட்டான் துருவ்.

"ஐயா இருக்காங்க" என்ற கூர்க்கா, துருவ் உள்ளே நுழைந்ததும், ஒரு டவலைக் கொண்டு வந்து கொடுத்தான்.

துருவ் 'தாங்க்ஸ்' என்று சொல்லியவாறு, டவலை வாங்கித் தலையைத் துவட்டிக் கொண்டான். ஈரத்தால் குர்த்தா உடம்போடு ஒட்டிக் கொண்டிருந்தது.

"ஐயா எங்கே?"

"அவங்க ரூம்லே இருக்காங்க. உங்களை அவங்க ரூமுக்கு வரச் சொன்னாங்க."

**து**ருவ் அவர் அறைக்குச் சென்ற போது, அவன் எதிர்பார்த்தபடியே மூர்த்தியின் எதிரில் கண்ணாடித் தம்ளர் இருந்தது. அவனைக் கண்டதும் அவர் தம்ளரைக் காலி செய்தார்.

"உட்காருங்க, மிஸ்டர் துருவ்."

அவர் அவனை மிஸ்டர் என்று குறிப்பிட்டது அவனுக்குச் சிறிது ஆச்சரியத்தைத் தந்தது.

"வாட் அபௌட் யூ?"

"நோ... தாங்க் யூ.

"இதுதான் உங்க பிரச்னை. கொஞ்சம் இந்தப் பழக்கமிருந்தா, 'ரிலாக்ஸ்டா' இருக்க முடியும்."

"நான் 'ரிலாக்ஸ்டா' இருக்கிறதாத்தான் நினைச்சிண்டிருக்கேன். எனக்கு இந்த வெளி உபகரணங்களெல்லாம் தேவையில்லே..."

''ஐ ஸீ...''

அவர் எழுந்து சென்று, அலமாரியின் தட்டில் வைத்திருந்த 'ஸ்காட்சை' எடுத்துத் தம்ளரில் ஊற்றிக் கொண்டார். தம் இருக்கையில் வந்து அமர்ந்தார். நிதானமாக, ஐஸ் பௌலி'லிருந்து ஐஸ் கட்டிகளை எடுத்துப் போட்டுக் கொண்டார்.

''உங்களுக்கு என்ன வேணும், காப்பி?''

''நோ, தாங்க்ஸ்... நான் சந்தியாவைப் பார்க்க வந்தேன்.''

''ஐ ஸீ... அவருக்குக் காப்பி வேணாமாம். நீ போ...'' என்றார் மூர்த்தி, அறை வாசலை நோக்கி.

துருவ் திரும்பிப் பார்த்தான். சூசை நின்று கொண்டிருந்தான். அவன் தொடர்ந்து நிற்பதைப் பார்த்ததும், மூர்த்தி கேட்டார்: ''எதுக்கு நிக்கிறே?''

''ஐயா சட்டையெல்லாம் ஒரே ஈரம்.''

''ஓ... ஐ ஆம் ஸாரி, வுட் யூ லைக் டு சேன்ஞ்? என் 'ட்ரெஸ்ஸிங் கவுனை'த் தர்றேன்.''

''பரவாயில்லே, ஐ ஆம் ஆல் ரைட்.''

மூர்த்தி வற்புறுத்தவில்லை. சூசை போய் விட்டான்.

''சந்தியா எப்போ வருவா?'' என்றான் துருவ்.

''சந்தியாவை நீ எதுக்காகப் பார்க்கணும்?'' என்று கேட்டார் மூர்த்தி. ஒரு சிகரெட்டை எடுத்துப் பற்ற வைத்துக் கொண்டே இந்தக் கேள்வியைக் கேட்டார்.

துருவ்வுக்குச் சில விநாடிகள் என்ன பதில் சொல்வதென்றே தெரியவில்லை. பிறகு சொன்னான்: ''ஐ ஷுட் ஸீ ஹர்.''

''வாட் ஃபார்? என்பதுதான் என் கேள்வி!''

ஒருவேளை, சந்தியா, அன்று அவள் அவனுக்கு ஃபோன் செய்தது, அவன் அம்மா அவளிடம் பேசியது — எல்லாவற்றையும் பற்றி இவரிடம் கூறியிருப்பாளோ?

அவள் அவனிடம் ஒரு சமயம் சொன்னது அவன் நினைவுக்கு வந்தது: ''ஐ டிஸ்கஸ் எவ்ரிதிங் வித் மை ஃபாதர். அவர் என் ஃப்ரெண்ட் மாதிரி.''

இவருக்கு இப்பொழுது என்ன பதில் சொல்வது? இந்நிலையில், நாக்குதல்தான் சரியான பாதுகாப்பு என்று அவனுக்குப் பட்டது.

''எனக்கு ஆச்சர்யமா இருக்கு. நீங்க கேக்கிறது. ஐ திங்க், சந்தியாவுக்குப் பதினெட்டு வயசுக்கு மேலே ஆகியிருக்குமில்லையா?'' என்றான் துருவ் புன்னகையுடன்.

''உன் அபிப்பிராயம் என்ன? அவளுக்குப் பதினெட்டு வயசு ஆயிடுத்தா, இல்லையா?''

மரியாதைப் பன்மை, ஒருமையில் மாறி வருவதை அவன் கவனித்தான். ''புரியும்படியாச் சொல்லுங்க.''

''அவ பொம்மை; நினைச்ச போது அவளோட விளையாடலாம், வேண்டாத போது, தூக்கி எறியலாம்னு நெனைச்சுண்டிருக்கே, அப்படித்தானே?''



**"இந்த இரண்டு ஜாதகங்களுமே உங்க ளுக்கு ரொம்பப் பொருத்தமா இருக்கு: முதல்ல ஒருத்தரைக் கட்டிக்கோங்க... விவாகரத்து முடிஞ்சதும், அடுத்த ஆளைக் கட்டிக்கிடலாம்!"**

**— வி. ரேவதி.**

"நீங்க சொல்றது ரொம்ப 'க்ரூடா' இருக்கு."

"எது 'க்ரூட்?' கோழை மாதிரி, நீ பேசாம, அம்மாகிட்டே சொல்லி, சந்தியாகிட்டே பேசச் சொல்றது, 'க்ரூடா' இல்லையா? நீ உன்னைப் பத்தி என்ன நினைச்கண்டிருக்கே? இஃப் யு ஆர் மேன் இனஃப், நீயே சந்தியாகிட்டே பேசிச் சொல்லியிருக்கணும். அம்மாகிட்டே சொல்லிப் பேசச் சொன்னியே, நான் கேக்கறேன், உனக்குப் பதினெட்டு வயசு ஆயிடுத்தா?"

"ஐ ஆம் ஸாரி. வாஸ் சந்தியா வெரிமச் அஃபென்டட்?"

"வாட் டு யு மீன்?"

"சந்தியா மனசு புண்பட்டிருந்ததுன்னா, அது அவள் என்கிட்டே எவ்வளவு எதிர்பார்த்தாங்கிறதைக் காட்டுமில்லையா? ஆனா, நான் அவளை நேத்திக்கிப் பார்த்தப்போ, இதைப் பத்திக் கவலைப்பட்டதாகவே தெரியலே. ரொம்ப சுபாவமாத்தான் பேசிண்டிருந்தா."

"ஸோ வாட்? அவளும் உன் மாதிரி அப்பா மடியிலே போய் உட்கார்ந்துப்பான்னு எதிர்பார்த்தியா? ஷி ஈஸ் எ மெச்சூர் பர்ஸன்," என்றார் மூர்த்தி.

"நீங்க பேசறது எனக்குப் பிடிக்கலே?" என்றான் துருவ், குரலைச் சற்று உயர்த்தி.

"தென் கெட் ஆஃப் ஃப்ரம் திஸ் ப்ளேஸ். நான் உன்னைக் கூப்பிடலே. உன் மூடுக்குத் தகுந்தபடி எல்லாரும் நடந்துக்கணும்னு நீ எதிர்பார்த்தால், அது ரொம்பத் தப்பு. என் பொண்ணுகிட்டே நீ நடந்துண்ட விதத்தை என்னாலே பொறுத்துக்க முடியும்னு எதிர்பார்க்கிறியா? ஷி ஈஸ் எ ஜெம் ஆஃப் எ கேர்ள். நீ அவளுக்குத் தகுதியே இல்லே. நீ ஒரு உதவாக்கரை. நீ ஜீனியஸ்ஸா இருக்கலாம்; ஆனால் உன்னாலே மத்தவங்களுக்கு என்ன பிரயோஜனம்? யு ஆர் மென்டலி ஸிக்... நீ 'அஸைலம்'த்திலே இருக்க வேண்டியவன்... டூ யூ அண்டர்ஸ்டாண்ட்? கெட் ஆஃப், கெட் ஆஃப்...!"

மூர்த்தி ஆவேசம் வந்தவர் போல் கத்தினார்.

துருவ் மௌனமாக அவர் வீட்டை விட்டு வெளியேறினான்.

(தொடரும்)

# கிழிந்த நோட்டு



"என்னங்க இப்படி ஏமாளியா இருக்கீங்க? கிழிஞ்ச ரூபாய் நோட்டைக் கொடுத்திருக்கான். நீங்களும் வாங்கிட்டு வந்திருக்கீங்களே!" என்று என் மனைவி அலறவும் பாத்ரூமிலிருந்து வேகமாக வெளியில் வந்தேன்.

அவள் சாதாரணமாகப் பேசினாலே எட்டு வீட்டுக்குக் கேட்கும். அதுவும் என்னைத் திட்ட ஆரம்பித்தால் அவள் குரல் ஊர் முழுவதும் எதிரொலிக்கும். அதைத் தவிர்க்கவே விரைந்தேன் ஹாலுக்கு.

அவள் கையில் ஓர் இருபது ரூபாய் நோட்டு.

"என்ன பானு, ஏன் சத்தம் போடறே?"

"நீங்க அசமஞ்சத்தனமா இருக்கிறது னாலதான். நான் சும்மா இருக்க நினைச்சா லும் கத்த வைக்கிறீங்களே!"

"என்னம்மா விஷயம்?" என்றேன் மேலும் தழைந்து போய்.

"இந்தக் குழைவு, நெளிவுக்கு ஒண்ணும் குறைச்சல் இல்லை! காய்கறிக்காரியிடமும் இப்படித்தான் வழிஞ்சிருப்பீங்க. அதான் கிழிஞ்ச ரூபாய் நோட்டை.. உங்க தலையிலே கட்டிட்டா..." என்று என் முகத்தில் இடிக்கி றாற் போல அதை நீட்டினாள்.

வாங்கிப் பார்த்தேன். நம்பர் உள்ள இடத்தில் கிழிந்து போயிருந்தது.

"என்ன முழிக்கிறீங்க? போய் மாத்திட்டு வாங்க!" என்றவளின் உத்தரவைக் கேட்டு அலுத்தேன்.

"இப்பத்தான் பானு, களைச்சுப் போய்த் திரும்பியிருக்கேன். திரும்பிக் கடைத் தெருவுக்குப் போகணுமா? நாளைக்குக் காலையில பேங்குல கொடுத்து மாத்திட றேன்..."

"உங்களைப் பத்தித் தெரியாதா? நாளைக்கு, நாளைக்குன்னு சொல்லுவீங் களே தவிர, செய்ய மாட்டீங்க. சோம்பேறித்தனம் உங்க பரம்பரைச் சொத்தாச்சே. அது மட்டுமில்லை. பேங்குக்குப் போகணும்னா டவுன் பஸ்சுக்கு ஒரு ரூபாய் செலவு வேற. போய் அந்தக் காய்கறிக்காரியிடமே மாத்திட்டு வாங்க..." என்று விரட்டினாள்.

அதற்கு மேல் தர்க்கம் செய்யத் திராணி இல்லாமல் நடையைக் கட்டினேன்.

"என்ன சாமி, யாருகிட்டேயோ ஏமாந்துட்டு என் கையில கொடுக்கறியே... இதானே வேண்டாங்கிறது. படிச்சவங்களே இப்படித்தான்..." என்று காய்கறிக்காரி நல்ல தமிழில் என் குலத்தைத் திட்ட ஆரம்பித்தாள்.

வீட்டில் மனைவியிடம் திட்டு. இங்கு காய்கறிக்காரியிடம். திட்டு. இன்னிக்கு மாலை ஆபீஸ்ல தூங்கி விழித்த நேரமே சரியில்லை என்று நொந்தபடியே யோசித்தேன்.

சட்டென்று ஓர் ஐடியா வந்தது.

ஹோட்டலுக்குச் சென்று ஒரு காப்பி குடித்தால் என்ன...?

காப்பி குடித்துவிட்டு, பில்லையும், கிழிந்த நோட்டையும் காஷுவலாக நீட்டிய படியே வால்போஸ்டர்களை வேடிக்கை பார்ப்பது போல நடித்தேன்.

பில்லை வாங்கிப் பணத்தைச் சரி பார்த்தார் அவர்.

"சார், ரூபாய் நோட்டுக் கிழிஞ்சிருக்கே. அதுவும் நம்பரிலே வேற. வேற நோட்டுக் கொடுங்க."

"ஹி! ஹி! வேறு பணம் இல்லையே?

கிருஷ்ணா



"அதிசயமா இன்னிக்கு எல்லா அயிட்டமும் ரொம்ப ருசியா இருந்துச்சு, சார்!"

"டேய்! புது சரக்கு மாஸ்டரை வரச் சொல்லு! சாமான்களைத் தாராளமாப் போடறான் போல இருக்கு. கண்டிச்சு வைக்கிறேன்!"

— என். வி. ரமணி.

---

என்ன பண்றது...?" என்று வழிந்து, நெளிந்தேன்.

"அப்படியா?" என்று யோசிக்கும் போதே சனி வந்து என்னைப் பிடித்தது.

"டேய் கண்ணா, என்னடா அதிசயமா ஹோட்டலுக்கெல்லாம்? கந்தக் கஞ்சனாச்சே நீ..." என்று முதுகில் அறைந்து மானத்தை வாங்கினான் என் நண்பன் பாலு.

விஷயத்தைக் காஷியர் சொன்னார்.

"டேய், உன்னிடம் நான் நேற்றுக் கைமாத்து வாங்கின பணம் பத்து ரூபாய் இந்தா... நானும் டிபன் சாப்பிடத்தான் வந்தேன். கம்பெனி கொடேன்!" என்று கழுத்தை அறுத்தான்.

வாங்கிய கடனைப் பாலு திருப்பிக் கொடுத்ததாகச் சரித்திரமும் இல்லை; பூகோளமும் இல்லை. என் விதி அவன் சரித்திரம் மாறிவிட்டது.

"இல்லைடா பாலு. இப்பத்தான் காப்பி..."

"அட வாடான்னா. பில்லைச் சேர்த்துக் கொடுத்துக்கலாம்..." என்று என் காப்பி பில்லையும், என்னையும் சேர்த்து உள்ளே தள்ளிச் சென்றான்.

"உனக்கு என்ன ஆர்டர் பண்ண?"

"இல்லை பாலு. நீ சாப்பிடு."

"ஒகேடா. நான் கொண்டு வந்ததே பத்து ரூபாய்தான். நீ பணம் இல்லாம திண்டாடுவதைப் பார்க்கப் பரிதாபமாய் இருந்தது. ஆபத்துக்கு உதவாத நண்பன், நண்பனே இல்லை. அதனாலதான் உன்னிடம் கொடுத்துட்டேன். அதனால என் பில்லையும் சேர்த்து நீயே கொடுத்திடு."

"அதுக்கென்னடா? தாராளமாய்" என்றேன் மனசுக்குள் குமுறியபடி.

மசால் தோசையும், போண்டாவும், காப்பியுமாய் லபக், லபக்கென்று அவன் விழுங்கியதைப் பக்கத்தில் அமர்ந்து வயிறெரியப் பார்த்துக்கொண்டிருந்தேன்.

பில் தொகை சரியாக என் காப்பியையும் சேர்த்து ஒன்பது ரூபாய் எழுபது காசாகக் காண்பித்தது.

படுபாவி! கணக்குப் பண்ணி டிபனை வெட்டியிருக்கிறான்.

"ரொம்ப நன்றிடா, வர்றேன்!" என்று பெரிதாக ஏப்பமிட்டபடியே வெளியேறினான்.

என் வயிற்றெரிச்சல் உண்மையாக இருந்தால் அவனுக்குப் பேதி வரக் கடவது என்று அவன் சென்ற திசையை நோக்கிச் சபித்தேன்.

எரியும் வயிற்றைக் குளிர்விக்கச் சோடா சாப்பிட்டால் என்ன?

சோடாவைக் குடித்துவிட்டு நோட்டை நீட்டினேன்.

"சார் வேற, நோட்டு கொடுங்க, கிழிஞ்சிருக்கு."

"வேற பணம் இல்லையேப்பா."

"பரவாயில்லை சாரே. நாளைக்குக் கொடுங்க. உள்ளூர்க்காரரான உங்களை நம்பாமல் வேற யாரை நம்பப் போறேன்..." என்றான்.

'அவன் நம்பிக்கையில் இடி விழ' என்று முணகியபடி கடையை விட்டு நகர்ந்தேன்.

"பாலுவுக்கு அல்வா என்றால் ரொம்பப் பிடிக்குமே. கால் கிலோ வாங்கினால் என்ன?"

யோசித்தபடியே ஸ்வீட் ஸ்டாலுக்குள் நுழைந்தேன்.

ஸ்வீட்டைக் கையில் வாங்கியபடி நோட்டை நீட்டினேன்.

மேலும், கீழும் அதை ஆராய்ந்து விட்டு என்னைப் பார்வையால் எரித்தான் கடைக்காரன்.

அவனின் கடோத்கஜ உடம்பு என்னைப் பயமுறுத்தியது.

இருந்தாலும் பாலுவைத் தியானித்தபடி வேறு பணம் இல்லாத பல்லவியைப் பாடினேன்.

அவன் பதிலேதும் பேசாமல் தன் கிடா மீசையை வருடியபடி என் சட்டைப் பையை முறைத்தான்.

புரியாமல் நானும் பார்த்தேன்.

ப்ச்! நான் இந்த இருபது ரூபாயை எடுக்கும் போது கூடவே பையில் இருந்த பணமும் சட்டைக்கு வெளியே லேசாகத் தலையை நீட்டிக் கொண்டிருந்தது.

மரியாதையாகப் பணத்தைக் கொடுத்து விட்டுக் கால் நடுங்க வெளியில் வந்தேன்.

கையிலிருந்த இருபது ரூபாயை வெறுப்புடன் பார்த்தேன்.

அது என்னைப் பார்த்து வில்லத்தனமாய்ச் சிரிப்பது போலிருந்தது.

இதை மாற்றுவதற்காக நான் செய்த செலவுகளைக் கணக்கிட்ட போது பகீரென்றது. கிழிந்த இருபது ரூபாயை மாற்ற இதுவரை கிட்டத்தட்ட இருபத்தஞ்சு ரூபாய் செலவு செய்திருப்பது தெரிந்து தலை சுற்றியது. பாலு என்னைக் கிழித்துத் தோரணமாய்த் தொங்கவிடப் போவது

ராமாயணத்தை டீவியில் தொடர் காட்சியாக அளித்துப் பெரும் புகழ் பெற்ற ராமானந்த சாகர், இப்போது ''ஸ்ரீ கிருஷ்ணா'' என்ற தலைப்பில் ஒரு வீடியோ தொடர் எடுத்திருக்கிறார். இது டீவியில் ஒளி பரப்பாகாது. வீடியோவில் பார்க்க வசதியாக காஸெட்டுகளாக வெளியாகும்.

வேத வியாசரின் ஸ்ரீமத் பாகவத புராணத்தை அடிப்படையாகக் கொண்ட 'ஸ்ரீகிருஷ்ணா' வீடியோ தொடர், வேறு பல புராணங்களிலிருந்தும் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா தொடர்பான நிகழ்ச்சிகளைத் தொகுத்துத் தருகிறது. மொத்தம் 78 அத்தியாயங்களை 26 காஸெட்டுகளில் வழங்குகிறது. இரண்டு மணி நேரம் ஓடும் ஒவ்வொரு காஸெட்டிலும் மூன்று அத்தியாயங்கள்.

முதல் காஸெட் பிப்ரவரி முதல் வாரம் வெளியாகியுள்ளது. இதிலேயே இரண்டு பாடல்கள். ஜனதா மாடலை விட உசத்தி மாடலின் விலை ரூ 140 அதிகம்! வீடியோ லைப்ரரிகாரர்கள் குஷியாக இருக்கிறார்கள்.



# ஸ்ரீ கிருஷ்ணா

இந்த வீடியோ தயாரிப்பையும் விளம்பரதாரர்கள் ஸ்பான்ஸர் செய்திருப்பதால் விளம்பரக்காட்சிகளும் டீவி போலவே உண்டு.

எழுதியது, தயாரித்தது, இயக்கியது எல்லாம் ராமானந்த சாகர்தான். உதவி: அவருடைய நான்கு மகன்கள்.

கிருஷ்ணராகத் தோன்றுபவர் ஏற்கெனவே பிரபலமான சர்வதாமன் பானர்ஜி. ராதையாக நடிப்பவர் புதுமுகம் அனுராதா. இவர் ராஜபுத்திர வம்சத்தில் பிறந்த அசல் ராஜகுமாரியாம்!

சர்வ நிச்சயம்.

''என்னப்பா, ரூபாய் நோட்டையே முன்னே, பின்னே பார்க்காதவன் மாதிரி இப்படி முறைச்சுப் பார்த்துக்கிட்டு நிக்கறே?'' என்ற குரல் அருகில் கேட்கவும் நிமிர்ந்தேன்.

மலர்ந்தேன்.

வங்கியில் வேலை பார்க்கும் என் நண்பன் வேணு நின்று கொண்டிருந்தான்.

மூக்கால் அழுதபடி விஷயத்தைச் சொன்னேன்.

''ப்பூ! இவ்வளவுதானா? என்னிடம் கொடு. நான் மாற்றித் தர்றேன்...'' என்று வாங்கிக் கொண்டான்.

போனவன் போனவன்தான். திருப்பித் தரவேயில்லை இதுநாள் வரை. தினமும் பானுவிடம் நான் வாங்கிக் கட்டிக் கொண்டிருக்கிறேன். இப்போதெல்லாம் இருபது ரூபாயைப் பார்த்தாலே அலர்ஜியாய் இருக்கிறது எனக்கு.

# நாவல் நாயகன்!

சந்திரன் படிப்பாளி; மனைவி பார்வதியோ...

ஹூம், இப்படி ஒரு பட்டிக்காடு எனக்கு வந்து சேரணுமா? ஷேக்ஸ்பியரும் விஞ்ஞானமும் உலக நடப்புக்களும் பெண்டாட்டி-யோட பேசலாம்னு நினைச்சேன்...

இந்தா, இந்தப் புத்தகங்களையும் வாசி படி! அறிவை வளர்த்துக்க. என் மனைவி என் குழந்தைகளின் தாயாக மட்டும் இருந்தால் போதாது; என் அறிவுக்கு ஒரு தோழமை தேவை!

ஆனால் பார்வதிக்குப் படிப்பில் நாட்டமில்லை...

என்ன, கம்பனைக் கொஞ்சம் அலசுவோமா?

சரியாப் போச்சு, பாத்திரம் தேய்ச்சுக் கவுக்கணும், சமையலறையை அலம்பி விடணும், சீக்கிரம் பாலைச் சாப்பிட்டுட்டு டம்ளரைக் கொடுங்க!

இதற்கிடையில் இரு குழந்தைகள் வேறு பிறந்து விட்டன.

என்ன 'அச்சாக்குட்டி' வேண்டிக் கிடக்கு? பாரதியின் 'சின்னஞ்சிறு கிளியே' பாடி கொஞ்சக் கூடாதா, குழந்தையை?

அதெல்லாம் யார் கண்டா? எனக்கு உங்க அம்மா-வோட சண்டை போடத்தான் நேரம் சரியா இருக்கு...

சந்திரனுக்கு அடிக்கடி வெளியூர் செல்ல வேண்டிய புது உத்தியோகம்... பம்பாயில்... நாளடைவில்...

ஊர்மிளா! என் இலக்கிய ஆர்வத்துக்கு ஈடுகொடுக்க நீயாவது கிடைச்சியே...

நானும்தான் உங்க நட்பு கிடைச்சதுக்குக் கடவுளுக்கு நன்றி சொல்லணும்...

அதே சமயம்... கணவன் அடிக்கடி வெளியூர் போகவே தனிமையை உணர்ந்த பார்வதி...

அவர்தான் இல்லே... அவர் ஆசையோட வாங்கித் தந்த புத்தகங்களை-யாவது படிப்போம்...

பார்வதியின் ரசனைகள் வளர்ந்த போது சந்திரன் மிகவும் விலகிச் சென்றிருந்தான். மூன்றாவது குழந்தையை எதிர்பார்த்த சமயத்தில்தான் அவனுக்கு அந்தச் சந்தேகம் ஏற்பட்டது. அவனுக்கு வெளியூரில் வேறொரு பெண்ணோடு தொடர்பு இருப்பது சீக்கிரமே ஊர்ஜிதமாகி விட்டது.

பார்வதி அவனைத் தட்டிக்கேட்டாள்... 'துரோகம்' என்று குற்றம் சாட்டினாள். சந்திரன் அவள் உணர்ச்சிகளை மதிக்கவில்லை: மிதித்தான்! நொந்து போய் கூட்டுக்குள் ஒடுங்கினாள் பார்வதி.

குழந்தைகள் வளர ஆரம்பித்தனர். அவர்களுக்காகப் புருஷன் — பெண்ஜாதி வேஷம் போட்டார்கள் பெற்றோர். சந்திரன் மெல்ல இரண்டாவது 'தொடர்பை' அறுத்து விட்டாலும் பார்வதி முன் போல் அவனிடம் ஈடுபாடு கொள்ளவில்லை.

குழந்தைகள் வளர்ந்து சுதந்திரப் பறவைகளாகி விட்டனர். கடமை முடிந்ததாகக் கருதிய பார்வதி இப்போது மணநல ஆலோசகரை அணுக முடிவு செய்து, சந்திரனுடன் சென்றாள்.

**பார்வதி — சந்திரன் தம்பதியுடன் பேசிய அனுபவத்தைக் கூறுகிறார் டாக்டர் ருத்ரன்:**

இந்தத் தம்பதி என்னிடம் வந்ததுமே நாங்கள் 'டைவர்ஸ்' செய்ய விரும்புகிறோம் என்றுதான் ஆரம்பித்தார்கள். சந்திரனுக்குக் கிட்டத்தட்ட அறுபது வயது; பார்வதிக்கோ ஐம்பது! 'அவசரப்படாதீர்கள்' என்று அவர்களை அமைதிப்படுத்தித் தனித் தனியே பேசிப் பார்த்தேன்.

பார்வதி சொன்னார்: எனக்கு மணமான புதிதில் இல்லாத இலக்கிய ஆர்வத்தையும் பொது அறிவையும் என் கணவர் விருப்பத்தின் பேரில் வளர்த்துக் கொண்டேன். அறிவிலும் சிந்தனையிலும் அவருக்குச் சமமாக நான் இருக்க வேண்டும் என்று விரும்பினார். அவருக்காக நான் வளர்த்துக்கொண்ட அறிவும் சிந்தனைத் திறனும் தாம் அவருடைய துரோகத்தைக் கண்டு பிடித்துத் தட்டிக் கேட்க எனக்கு உதவின. அப்போது அவர் என்னையே வெறுத்தார்! என்னை நான் வளர்த்துக் கொண்டது அவருடைய போலித்தனத்தைக் கண்டு பிடித்து என் மனம் புண்படவே உதவியிருக்கிறது... இனியும் எங்கள் போலி வாழ்க்கை தொடர வேண்டுமா....?

சந்திரன் கூறினார்: என் மனைவி அழகாக இருந்தால் மட்டும் போதாது. புத்தி சாலியாகவும் இருக்க வேண்டும்; அறிவு ஜீவியாக இருக்க வேண்டும் என்று விரும்பினேன். என்னுடன் கவிதை படிக்க அவளுக்கு நேரமே இருந்ததில்லை. எப்போதும் அடுக்களை வேலை. இல்லாவிட்டால் என் அம்மாவுடன் சண்டை. மனப் பொருத்தம் இல்லாத மணவாழ்க்கை என்னை வேறு துணையை நாடச் செய்தது. பம்பாயில் என் கனவுகளுக்கெல்லாம் உருவம் கொடுத்த ஊர்மிளாவைச் சந்தித்தேன். இதமான அவள் துணையில் பொருந்தாத மண வாழ்வின் உளைச்சல்களை மறந்தேன். இதற்கிடையே எனக்கும் பார்வதிக்கும் மூன்று குழந்தைகள் வேறு பிறந்து விட்டன. குழந்தைகள் வளர வளர என்னை ஒரு பயமும் கவலையும் ஆட்கொண்டது. அவர்களை உத்தேசித்து ஊர்மிளாவுக்கு என் வாழ்க்கையிலிருந்து விடை கொடுத்து விட்டேன். ஆனால் பார்வதி...? என்னை ஆரம்பத்தில் அவள் புரிந்து கொள்ளவில்லை, பிற்பாடோ வெறுத்தே ஒதுக்கி விட்டாள்... இனிமேலாவது நாங்கள் வெவ்வேறு பாதைகளில் செல்ல வேண்டும்; மனக்கிலேசம் இன்றி நிம்மதியாக வாழ வேண்டும்.

'மனப் பொருத்தம் இல்லாததால் வேறு துணை நாடினேன்' என்று சந்திரன் சொன்னதைக் கவனியுங்கள்! மனப் பொருத்தம் என்றால் என்ன என்பதே இளம் வயதில் புரிபடுவதில்லை!

பல புத்தகங்களை, நாவல்களைப் படிக்கும்போது காதலர்கள் தம்பதிகள் சித்திரிக்கப்படும் விதத்தால் கவரப்படுகிறோம். புத்தகங்களின் நாயக, நாயகிகள் 'ஒத்த ரசனை,' 'மனப் பொருத்தம்,' 'அறிவுத் துணை' 'கலைக் காதல்' போன்ற காரணங்களுக்காகத் திருமண பந்தத்தை மீறும் போது அந்தக் கதாபாத்திரங்களின் பால் ஆழ்ந்த அனுதாபம் ஏற்படுகிறது.

சொந்த வாழ்க்கையில் இந்த அனுதாபத்தையும், 'நாவல் நெறிகளையும்' அளவு கோல்களாகக் கொள்ளும்போது ஏற்படும் தவிர்க்க முடியாத சோகம்தான் பார்வதி — சந்திரன் வாழ்க்கையில் ஏற்பட்டது.

அடிப்படைக் கொள்கைகளில் ஒன்று பட்டால் போதும்; கணவனும் மனைவியும் மனப் பொருத்தத்தை அடைந்து விட முடியும். அதற்கான பொறுமையையும் விசாலமான மனத்தையும் நாம் வளர்த்துக் கொள்ள வேண்டும். இதைத்தான் நாம் நாவல்களிலும் இதிகாசங்களிலும் கற்று உணர வேண்டுமே தவிர, எல்லை மீறுதல்களை அல்ல!

சந்திரன் — பார்வதி கதை என்ன ஆயிற்று...? இந்த வயதுக்கு மேல் டைவோர்ஸ் செய்து விட்டு அவர்கள் என்ன செய்ய முடியும்...? சேர்ந்துதான் வாழ்கிறார்கள். ஆனால் விழுந்த விரிசல் விழுந்தது தான்...!

தொகுப்பு: **எஸ். ஆர்.**

# மெல்ல மெல்லச் செவிடாக்கும் இரைச்சல்கள்!



சண்முகம் ஒரு தொழிற்சாலை ஊழியர். சில நாள் எட்டு மணி நேர வேலைக்கு மேல், சில மணி நேரம் ஓவர் டைமும் செய்வதுண்டு. தொழிற்சாலையில் அவர் பணி புரியும் இடத்தில் உள்ள ஓசை அவருக்குப் பழக்கமானது; அதோடு அவர் இருபத்தைந்து வருடங்களாக வாழ்ந்து வருகிறார். காலையில் அவர் வீட்டின் அருகே கோயிலிலிருந்து ஒலிபெருக்கி மூலம் பாட்டுகள் பீறிடும். அவர் அதையும் லட்சியம் செய்ததில்லை. சீக்கிரம் வேலை முடிந்தால் மாலையில் அரசியல் பொதுக் கூட்டங்களுக்குப் போவார். எல்லாமாகச் சேர்ந்து அவரது செவிகளைத் தாக்கி வந்திருக்கின்றன. கொஞ்சம் கொஞ்சமாக அவரது செவிப் புலன் குறையத் தொடங்கியதை மெல்லத்தான் உணர ஆரம்பித்தார். எதையும் இரண்டாவது தடவை திரும்பச் சொல்லும்படி பலரிடம் கேட்க வேண்டியிருந்தது. போனில் பேசும் போது மறுதரப்பில் பேசப்பட்டது காதில் சரியாக விழவில்லை. எதற்கும் காது – மூக்கு – தொண்டை சிகிச்சை நிபுணரைப் பார்ப்போம் என்று போனார்.

ஆடியோமெட்ரிக் பரிசோதனையில், அவரது செவிப்புலன் குறைபட்டிருப்பது தெரியவந்தது. இதே ரீதியில் அவர் செவியை இரைச்சல்கள் தாக்குமானால் கிட்டத்தட்ட காது கேட்காமலே போகும் என்ற அபாய அறிவிப்பு அவருக்கு அதிர்ச்சியைத் தந்தது.

நகரங்களில் அன்றாடம் கேட்கும் பேரிரைச்சல்கள், அந்தச் சமயத்தில் நம்மிடம் சட்டென்று எந்தப் பாதிப்பையும் உண்டாக்குவதில்லை. அதிகம் போனால் எரிச்சலூட்டும். ஒட்டுமொத்தமான பாதிப்பு மெல்லத்தான் தெரிய ஆரம்பிக்கிறது. பாதிக்கப்பட்டவர்களில் சண்முகம் ஒரு பிரதிநிதி.

இது தொடர்பான பல ஆராய்ச்சிகள் செய்து, விருதுகளும் பெற்றவர், இத்துறை மருத்துவ நிபுணர் டாக்டர் எஸ். காமேசுவரன். பெருகி வரும் இரைச்சல் பற்றி அவரிடம் கேட்டோம்.

"சில வருடங்கள் முன்பு, கோவையில் ஈ.எஸ்.ஐ. மருத்துவமனை வளாகத்தில் ஆலைத் தொழிலாளர்களுக்கான சுகாதார முகாம் ஒன்று நடந்தது. பதினாறு வயதே ஆன இளம் ஊழியர்களுக்குக் கூட, செவிப் புலன் பாதிக்கப்பட்டிருந்ததை அறிந்த போது பெரு வியப்பாகவும், வருத்தமாகவும் இருந்தது. இத்தனைக்கும், அவர்களுக்குக் காது சம்பந்தமான நோய் எதுவும் இருக்கவில்லை. அவர்கள் மிகச் சிறு வயதிலிருந்தே ஜவுளி ஆலைகளின் இயந்திர இரைச்சலில் வாழ்ந்து வருவதுதான் காரணம் எனத் தெரிந்தது" – என்றார் டாக்டர் காமேசுவரன்.

"முதுமை காரணமாகக் கண்பார்வை குறைவது போலத்தான், காது கேட்கும் சக்தியும் குறையும் என்று சில காலம் முன்பு வரை நம்பிக்கொண்டிருந்தோம். ஆனால் செவிப்புலன் விஷயத்தில் அப்படி அல்ல


• ராஜசேகரன் நாயர்

என்று இப்போது தெரிகிறது. மலைவாழ் பழங்குடியினரை ஆராயும் போது இது உறுதியாகிறது. நகரத்தில் வசிப்போரே அதிகம் பாதிப்புக்கு உள்ளாகிறார்கள்.

"ஒலியமைப்புத்துறை நிபுணரான பேராசிரியர் பி.எஸ். ராமகிருஷ்ணா இரைச்சல் உருவாகும் இடங்கள் என்று மூன்று பகுதிகளைச் சொல்லியிருக்கிறார். இயந்திர ஓசைகள் மிகுந்த தொழிற்சாலைகள்; தரை மற்றும் ஆகாய வழிப் போக்குவரத்து வாகனங்கள்; கட்டடங்கள் கட்டும் இடங்கள், கேளிக்கை விழாக்கள் போன்ற சமூகம் சார்பான நிகழ்ச்சிகள். இவற்றில் முக்கியத்துவம் வாய்ந்தது தொழிற்சாலை இரைச்சல்களே.

"சாலையில் கேட்கும் பேரிரைச்சல், சாலை விபத்துக்கள் நிகழக் காரணமாக இருந்திருக்கிறது. சோர்வுக்கு ஆளான ஓட்டுநர், இரைச்சல்களும் சேர்ந்து கொண்டதன் காரணமாகக் கட்டுப்பாட்டை இழக்கிறார்; விபத்து நேர்கிறது!

"ஓர் அலுவலகத்திலுள்ள டைப்பிஸ்ட்டு


• டாக்டர் எஸ். காமேஸ்வரன்



"சதாம் உசேனுக்குப் பிடிக்காத டீ.வி. எதுன்னு சொல்லு பார்ப்போம்?"

"இது தெரியாதாக்கும்; 'புஷ்' டீ.வி.!"

— ப. நாகமணி.

களைப் பரிசோதனைக்கு உட்படுத்தினோம். 90 டெஸிபல்களுக்கு மேற்பட்ட சத்தத்துக்கு உள்ளான ஊழியர்களின் பணியில் குறைபாடுகள் தெரிந்தன. அவர்கள் சுலபத்தில் எரிச்சலடைந்தார்கள். விமான நிலையங்கள் அருகே வசிப்போரிடையே எடுத்த சர்வேயிலும் இந்த எரிச்சலுணர்வு வெளிப்பட்டது.

"இரைச்சல் பாதிப்பு, மனிதனை நிம்மதி இழக்கச் செய்து இரவில் சரியாகத் தூங்க வொட்டாமல் பண்ணி நரம்புத் தளர்ச்சியிலும், ரத்த அழுத்தத்திலும், கடைசியில் இதய நோயிலும் கூடக் கொண்டு போய் விட்டு விடும்!"

**டா**க்டர் காமேசுவரனிடம், மேலும் சில கேள்விகள் கேட்டோம்:

○ செவியின் எந்தப் பகுதியை இரைச்சல் பாதிக்கிறது?

உள் காதுக்குள் முடி மாதிரி ஹேர் செல்கள் இருக்கின்றன. இவை பாதிக்கப்பட்டு, உதிர ஆரம்பிக்கின்றன. பிறகு மெல்ல மெல்லச் செவியின் கேட்கும் தன்மை குறையும். இதுதான் நரம்புத் தளர்ச்சியால் வரும் காது கேளாமை.

○ தொழிற் சாலையில் வேலை செய்யும் போது, காதுக்கு அடைப்பான் போட்டுக் கொண்டால் இதைத் தவிர்க்க முடியாதா?

போட்டுக்கொள்ளலாம். ஆனால் இதைப் பலரும் விரும்புவதில்லை. ஒரு முறை ஒரு மில்லில் இது பற்றிப் பேசும் போது குறிப்பிட்டேன். ஓர் ஊழியர் எழுந்திருந்து, ஒரு கேள்வி கேட்டார்: ஸ்பிண்டில்கள் ஓடிக் கொண்டிருக்கும் போது, ஒரு வார்ப்பு தவறாகப் போனால் கூட அந்த மாறுபட்ட ஓசையைக் கொண்டு என் காது அதை உணர்ந்து கொண்டு விடுகிறது. சரி செய்கிறேன். அடைப்பான் போட்டுக் கொண்டால் இம்மாதிரி தவறுகளைக் கண்டு பிடிக்க முடியுமா? நானே திகைத்துப் போனேன். அப்படி மாறுபாட்டைக் காண்பிக்க, உடனே விளக்கு எரியுமாறு, அல்லது மணி ஒலிக்குமாறு இயந்திரத்திலே சில மாறுதல்களைச் செய்ய வேண்டும். இதெல்லாம் சாத்தியமாகப்படவில்லை. காரணம், கூடுதல் செலவு.....

○ அதிகச் சத்தம் இதய நோயைக் கூட உண்டாக்கும் என்றீர்களே, எப்படி?

இதயத்துக்கு வெளியே உள்ள சிறிய ரத்தக் குழாய்கள் சுருங்கி, ரத்தம் சரிவரப் பாய முடியாமல், அத்தனை ரத்தமும் இதயத்துக்குப் பாய்ந்து ரத்த அழுத்தத்தை அதிகப்படுத்துகிறது. இதுவே சிலகாலம் சென்று இதய நோயாகத் தாக்குகிறது.

**ஒ**லியை ஹெர்ட்ஸ் **(Hertz)** என்று கணிக்கிறார்கள். அதன் தீவிரத்தை அதாவது 'இன்டென்ஸிடி'யை டெஸிபல்களில் குறிக்கிறார்கள். இருபது ஹெர்ட்ஸ் முதல் இருபதாயிரம் ஹெர்ட்ஸ் வரைதான் சாதாரணமாகக் காது கேட்கும் எல்லை. இருபதுக்குக் கீழே இருந்தால் கேட்காது. இருபதாயிரத்துக்கு மேல் போனாலும் கேட்காது. ஆனால் மிருகங்களுக்கும், பறவைகளுக்கும் இது மாறுபடும். இருபதுக்குக் கீழே 'இன்ஃப்ரா சவுண்ட்' என்றும், இருபதாயிரம் ஹெர்ட்ஸுக்கு மேல் 'அல்ட்ரா சவுண்ட்' என்றும் சொல்லுவார்கள். பறவைகளுக்கும், மிருகங்களுக்கும் இருபது ஹெர்ட்ஸுக்குக் கீழேயும் கேட்கும். பூகம்பம் வருமுன், பூனை—நாய் முதலியன ஓடிப் போய்விடுவதற்கு இதுதான் காரணம்! சாதாரணமாக ஒருவருடன் ஒருவர் பேச 250 ஹெர்ட்ஸ் முதல் 2,000 ஹெர்ட்ஸ் வரை இருந்தால் போதும்.

"எட்வர்ட் சி. ஒ்றூஸ் என்ற மன இயல் மருத்துவர், இரைச்சல் காரணமாக மன அமைதி கெடுவதோடு மனிதனுடைய போக்கிலேயே ஆவேசமும், கொடூர குணமும் சேர்ந்து விடுகிறது என்று எச்சரிக்கிறார். தென் இந்தியாவில் ஒரு சர்வே எடுத்தோம். ஐம்பது சதவிகிதத்துக்கு மேற்பட்ட தொழிற்சாலைப் பணியாளர்கள், இரைச்சலினால் பாதிக்கப்பட்டுப் போராடும் மனோபாவம் படைத்தவர்களாய் மாறிவிடுகிறார்கள் என்பது அதிலிருந்து தெரிய வந்தது. காலையில் எழுந்த உடனே டிரான்ஸிஸ்டர் ஓசை; வேலை செய்வதும் ஓசைமிகுந்த தொழிலகத்தில். வேலைக்குப் போகும் வழியெங்கும் ஒரே இரைச்சல். வீடு திரும்பும் போதும் அதே இரைச்சல்தான். இப்படி அவன் சாதாரண ஓசை வரம்புகளை மீறித்தான் வாழ்கிறான். அப்போது அவன் செவியும், குணமும் மாறுபடாமல் எப்படி இருக்க முடியும்? பொழுது போக்காகச் சினிமாவுக்குப் போனால் அங்கேயும் இதே இரைச்சல்தானே?" என்கிறார் டாக்டர் காமேசுவரன்.

# CORRESPONDENCE COURSE ON ENTREPRENEURIAL DEVELOPMENT

"EMGEEBEE INDUSTRIAL ADVISORY AND MONITORING SERVICES (P) LTD.". (EIAMS),

are happy to announce the Second Batch of their Correspondence Course on Entrepreneurial Development, in English, from May 1st 1991. Duration of the Course is six months. The fee is Rs.750/- (Rs. Seven Hundred and Fifty only). Minimum educational qualification is a pass in X Standard. The course will be useful for both the prospective and existing SSI entrepreneurs. For prospectus and registration form please apply with postal order/bank draft for Rs. Ten only (non-refundable) on or before 15th March, 1991, to:

EIAMS (P) LTD.
25, Second Floor, Fourth Trust Cross Street,
Mandavelippakkam, Madras-600 028

## ஸ்ரீ நாராயணதீர்த்தர் ஸ்வாமிகளின் ஆராதனை விழா

## திருப்பூந்துருத்தி

திருப்பூந்துருத்தி ஸ்ரீ நாராயண தீர்த்த ஸ்வாமிகளின் ஆராதனை விழா இவ்வாண்டு 20.02.-91 புதன் கிழமை முதல் 22.02.91 வெள்ளிக் கிழமை முடிய ஸத்குருவின் ஆஸ்ரமத்தில் சிறப்பாக நடைபெறவிருக்கிறது. சென்னையில் ஓய்வு பெற்ற தென்னக ரயில்வே கூடுதல் பொது மேலாளர் திரு. B. மாதவன் அவர்கள் தலைமை தாங்கவும், திருச்சி பாரதிதாசன் பல்கலைக்கழக துணைவேந்தர் Dr. S. முத்துக்குமரன் விழாவை துவக்கி வைக்கிறார். சங்கீத வித்வாம்ஸினிகள் திருமதி. C. சரோஜா, திருமதி C. லலிதா அவர்கள் குத்துவிளக்கு ஏற்றி ஸ்வாமிகளின் தரங்கங்களை பாடி இன்னிசை நிகழ்த்துகிறார்கள். திரு. R. ரமேஷ் ப்ரஸாத் (Vice President, Press Metal Corporation, Madras) முக்கிய விருந்தினராக வருகை தந்து, தரங்க வித்யாசாலை மாணவ, மாணவிகளுக்கு பரிசுகளை வழங்குகிறார். Dr. தவத்திரு குன்றக்குடி அடிகளார் சிறப்பு சொற்பொழிவாற்றவிருக்கிறார். சென்னை கூடுதல் பொது மேலாளர் திரு. N. V. சுப்ரமண்யம், டாக்டர். S. S. ஜானகி, டைரக்டர் குப்புஸ்வாமி சாஸ்திரி இன்ஸ்டிடியூட் சென்னை, செல்வி. R. விஜயலக்ஷ்மி, M.A.B.L., I.R.S. கமிஷனர், Income Tax அவர்களும் 21, 22 தேதிகளில் முக்ய விருந்தினராக பங்கு கொள்கிறார்கள். ஆராதனை விழாவின் மூன்று நாட்களிலும் பம்பாய் சகோதரிகள், Flute Master. சஷாங்க், சங்கீத கலாநிதி திரு. B. ராஜம் அய்யர், திரு. B. V. ராமன், திரு. B. V. லக்ஷ்மணன், திரு. K. P. சிவானந்தம், திருமதி. சாரதா சிவானந்தம், திரு. குமரேஷ், திரு. கணேஷ், திருமதி. R. வேதவல்லி, திருவெண்காடு. திரு. ஜெயராமன், குளிக்கரை திரு. விஸ்வலிங்கம், உதயசங்கர் ஜோஷி, தஞ்சை திரு. சங்கரய்யர், திரு. J. வெங்கட்ராமன், போழக்குடி திரு. கணேச அய்யர், திரு. G. N. தேசிகன், திரு. A. ஸ்ரீனிவாச ராகவன், நங்கநல்லூர் திரு. ராமனாதன், திருமதி. மீனா சுப்ரமண்யம், கோவை சுப்புலக்ஷ்மி, திருமதி. யோகம் சந்தானம், திருமதி. மீரா சேஷாத்ரி, திருமதி. ஜயலக்ஷ்மி சந்தானம், திருமதி. மீரா சேஷாத்ரி, திருமதி. ஜயலக்ஷ்மி சந்தானம், வயலின் திரு. M. சந்திரசேகரன், திருப்பாற்கடல் திரு. வீரராகவன், திருவள்ளூர் திரு. பார்த்தசாரதி, பித்துக்குளி முருகதாஸ், திரு. K. பாலசுப்ரமண்யம், திருமதி. கமலா மூர்த்தி மற்றும் பல கலைஞர்களும் கலந்து கொள்கிறார்கள்.

விழாவிற்கான ஏற்பாடுகளை காரியதரிசி திருப்பூந்துருத்தி திரு. V. வெங்கடேசன், உபதலைவர்கள் திரு. ப்ரதாப்சிங்கராடே ராவ், திரு. A. சுப்ரமண்ய செட்டியார் ஆகியோர் கவனித்து வருகிறார்கள். பக்தகோடிகள் ஆராதனை விழாவிற்கு தாராளமாக பொருளுதவி செய்து பங்கு கொள்ள வேண்டுகிறோம்.

திரு. L. பாலசுப்ரமண்யம், பொருளாளர், 1090, பாபண்ணா சந்து, தஞ்சாவூர் — 613 009.

இங்ஙனம்: ஸ்ரீ நாராயணதீர்த்த ஸ்வாமிகள் ஆராதனை மஹோத்ஸவ கமிட்டி, திருப்பூந்துருத்தி.

"சாலைப் போக்கு வரத்து இரைச்சலைக் குறைக்க, இரு புறமும் புளிய மரம், வேம்பு, அசோக மரங்கள் நடுவது பலன் தரும். இந்த மரங்கள் சத்தத்தை உறிஞ்சிக் கொண்டு விடுகின்றன. ஐந்து டெஸிபல்/சானல்ச் சத்தத்தைக் குறைத்துவிடுகின்றன!"

ஒலிபெருக்கி இரைச்சல், ஏர்–ஹார்ன் இரைச்சல் இவற்றைக் கட்டுப்படுத்த போலீஸ் துறை என்ன செய்கிறது?

சென்னை நகர, காவல்துறை ஆணையர் கே.கே. ராஜசேகரன் நாயரிடம் விசாரித்த போது சொன்னார்:

"ஏர்–ஹார்ன்கள் நகரங்களில் பயன்படுத்துவது தடை செய்யப்பட்டிருக்கிறது. மீறி உபயோகிப்பவர்களைத் தண்டிக்கிறோம். பொது இடங்களில் இரைச்சலைக் கட்டுப்படுத்த, போலீசுக்குப் போதிய அதிகாரம் இருக்கிறது. ஒலிபெருக்கிக்கு லைசன்ஸ் கொடுக்கும் போதே இதை வலியுறுத்துகிறோம். சத்தத்தைக் குறைவாக வையுங்கள் என்று தெளிவாகச் சொல்லுகிறோம். சில சமயம், காவலர்களை நேரடியாக அந்த இடத்துக்கே அனுப்பி வைத்து, சத்தத்தைக் குறைக்கச் செய்கிறோம்.

"காது குத்தும் விழாவுக்கும், தெருக் கோயில் விழாவுக்கும் பெருத்த ஓசையுடன் ஸ்பீக்கர்களை வைத்து, சுற்றிலும் குடியிருப்பவர்களுக்கு வேதனை தருவதை, அந்தப் பகுதி மக்கள் தாங்களாகவே முன் வந்து நிறுத்திக் கொள்ளுவதுதான் நல்லது. சட்டத்தை அமல் செய்வதில் மட்டுமே தீவிரம் காண்பிக்காமல், அவர்களே அந்த இரைச்சலின் பாதிப்பை உணர்ந்து கொள்ளும் விதத்தில் இதமாக எடுத்துச் சொல்லுவது பலனளிக்கும். அந்தந்தப் பகுதியில், அவர்களிடையே செல்வாக்குள்ள தலைவர்களோ பெரியவர்களோ இருப்பார்கள். அவர்களைப் பயன்படுத்திக் கொண்டு, எடுத்துச் சொல்லலாம். அடக்குமுறையை விட அறிவூட்டுதலே சிறந்தது.

"ஸ்பீக்கர் தொல்லை தாங்க முடியாத அளவில் போனால் கன்ட்ரோல் அறைக்குக் கூப்பிட்டுச் சொன்னால் போலீஸ் அந்த இடத்துக்கு விரைந்து நடவடிக்கை எடுத்து வருகிறார்கள்.

"அரசியல் கட்சிகளின் பொதுக் கூட்டங்களில் கோன்–ஸ்பீக்கரை உபயோகிக்கலாம் என்று அரசே முடிவு செய்திருக்கிறது. இதில் போலீஸ் துறை எதுவும் செய்ய முடியாது. பொது மக்களின் நலன் கருதி, அரசியல் கட்சிகள் தாமாகவே முன் வந்து இவற்றைப் பயன்படுத்தாமல் இருந்தால் தான் உண்டு!"

பேட்டி, கட்டுரை: **சாருகேசி**

வண்ணப்படம்: **உத்ரா**

கலை: **ஜி. கே. மூர்த்தி**

புகைப்படங்கள்: **ரமணன்**





# அப்பா

மனம் நிறைந்த அமைதியான வாழ்க்கை. வெற்றிகரமாக நடத்தி வந்த ரெஸ்டாரென்ட்டின் பொறுப்பை மகளிடமும் மருமகனிடமும் ஒப்படைத்து ஓய்வு பெற்றாகிவிட்டது. அன்பை அள்ளிச் சொரிந்த மகள். நொடிக்கு நொடி பாசத்தை வெளிப்படுத்திய மருமகன், உயிரையே அவர் மீது வைத்திருந்த பேரக் குழந்தைகள்...

அதற்குமேல் என்ன தேவை?

முழுநிறைவுடன் மகிழ்ச்சியில் மிதந்து கொண்டிருந்த ஜோ முயல்லரின் வாழ்க்கையில், அன்று பிற்பகலில், திடுமென டெலிபோன் அலறிப் புயல் வீசக் காரணமாகியது.

மகள்தான் எடுத்தாள். ''ஹலோ'' என்றாள்.

மறுமுனைக்குரல் அவள் முகத்தில் ஒரு மாற்றத்தைக் கொண்டு வந்தது. குழப்பம் படரத் தந்தையை நோக்கினாள்.

''யாரது?'' கேட்டார் அவர்..

''யாரோ ஒரு பெண்மணி. உங்களிடம் தான் பேச வேண்டுமாம்.''

எழுந்து வந்து ரிசீவரை வாங்கி, ''ஜோ முயல்லர் ஹியர்'' என்றார்.

மறுமுனை படபடவென்று பேசியது.

''இன்று பிற்பகல் டீ.வி. நிகழ்ச்சிகளைத் தவறவிட்டு விடாதே. அவசியம் பார். ரொம்ப ரொம்ப முக்கியம்...!''

சொல்லி முடித்த அவசரத்தோடு தொடர்பு துண்டிக்கப்பட்டுவிட்டது.

டீ.வியை ஓட விட்டுத் தந்தையும் மகளும் பார்த்துக் கொண்டிருந்தார்கள். விளம்பரங்கள்...... அவற்றின் முடிவில் ஒரு பேட்டி.....

தலைநரைத்த ஒரு பெண்மணியை அந்தத் தயாரிப்பாளன் பேட்டி கண்டான். அவள் சொன்னாள்.

''என் பெயர் ஜெட்னிக். ஜெர்மனியில் ஒரு யூதக்குடும்பத்தில் பிறந்தவள். உலகப் போர்க் காலத்தில் ஹிட்லரின் நாஜி படையினரால் அழிக்கப்பட்ட எத்தனையோ யூதர்களில் என் குடும்பத்ினரும் அடக்கம். கொலை வெறி பிடித்த நாஜி ராணுவ வீரன் ஒருவனிடம் நாங்கள் மாட்டிக் கொண்டோம்.

அவள் பேச்சை நிறுத்தி, உலகப் போர்க் காட்சிகளையும் போர்க்காலத்தில் நடைபெற்ற சில நாஜிக் கொடுமைகளையும் காட்டினார்கள். அதன் முடிவில் ஜெட்னிக் தொடர்ந்தாள்.

''அப்போது நான் சிறுமி. எனக்கடுத்து ஒரு கைக்குழந்தை. ஒரு பாவமும் அறியாத எங்கள் குடும்பத்தை விட்டு விடும்படி என் பெற்றோர் கெஞ்சினார்கள். குறைந்த பட்சம் என்னையும் குழந்தையையுமாவது கொல்லாமல் விட வேண்டும் என்று கேட்டுக் கதறி அழுதார்கள். அந்த ராணுவ வீரன் மறுத்துவிட்டான். மடமடவென்று சுட்டுத் தள்ளி விட்டான். குண்டு பட்டு மயக்க மடைந்த நான் மட்டுமே தப்பித்தேன். மற்ற அனைவரும்.....'' வார்த்தைகளை முடிக்க இயலாமல் துக்கம் தொண்டையை அடைக்கத் தலையைக் குனிந்து கொண்டாள். சில நொடிகளில் சமாளித்துக் கொண்டு தொடர்ந்து பேசினாள்.

''யுத்தத்தின் முடிவில் நேச நாடுகள் வென்றன. ஜெர்மனி அழிந்தது. ஹிட்லரின் நாஜி அதிகாரிகள் போர்க்குற்றவாளிகளாகக் கருதப்பட்டு அடாத செயல்களுக்குத் தண்டனை பெறத் தொடங்கினார்கள்.

**திரைவிழாப் படக்கதை**
**(ஆஸ்திரேலியா)**

''அந்த ராணுவ வீரனின் முகம் என் நெஞ்சில் ஆழப் பதிந்து போயிற்று. அதன் பின் என் வாழ்க்கையில் எத்தனையோ மாற்றங்கள். என்றாலும் அந்த முகத்தை மட்டும் நான் மறக்கவில்லை. அவனைத் தேடுவதை, அவனைப்பற்றிய தஸ்தாவேஜுகளைச் சேகரிப்பதை என் குறிக்கோளாகக் கொண்டேன். போர்க் குற்றவாளியாக மாட்டிக் கொள்வதிலிருந்து தப்பிக்க அவன் எங்கேயெல்லாம் போயிருக்கக் கூடுமோ அந்தநாடுகளிலெல்லாம் அவனைக் கண்டு பிடிக்கும் முயற்சிகளை நான் கைவிடவில்லை. கடைசியில் என் பிரயத்தனங்கள் வெற்றி பெற்று விட்டன. நாற்பத்தைந்து ஆண்டுகளுக்குப் பின்னர் அவனை இங்கே, இதே ஊரில் கண்டுபிடித்து விட்டேன். அவன் மீது கொலைக்குற்றம் சாட்டுகிறேன். பகிரங்கமாகச் சாட்டுகிறேன். நீதி மன்றத்தில் விசாரிக்கப்பட்டுத் தண்டிக்கப் பட வேண்டிய கொலைகாரன் அவன்.''

தற்செயலாக ஜோவைத் திரும்பிப் பார்த்தாள் மகள். அவர் முகத்தில் ஒரு தீவிரம் தெரிந்தது. இமைக்கக் கூட மறந்து டி.வி. திரையையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தது தெரிந்தது. பார்வையைத் திருப்பினாள்.

ஜெட்னிக் தொடர்ந்து பேசினாள்: ''அவன் இன்று ஒரு பெரிய மனிதனாக இருக்கிறான். இருந்தும் தைரியமாக அவனைக் குற்றம் சாட்டுகிறேன். அவன் யார் தெரியுமா?... ஜோ முயல்லர்.''

நயாகராவின் பேரொலியோடு அந்தப் பெயர் காதுகளில் ஒலிக்க, ''நோ'' என்று அலறினாள் மகள்.

திரையில் அவர் முகம் க்ளோஸ் அப்பில் காண்பிக்கப்பட — ''மைடியர்! வேறு யாரோ வென்று என்னை நினைத்துக் கொண்டு அவள் இம்மாதிரி குற்றம் சாட்டுகிறாள்'' என்றார் ஜோ ஒரே சீரான குரலில்.

அந்த நொடி முதல் அந்த வீட்டில் அமைதி விடைபெற்றுக் கொண்டது. பத்திரிகையாளர்கள் படையெடுத்தார்கள். டி.வி. செய்தியாளர்கள் காமிராக்களுடன் சூழ்ந்து கொண்டார்கள். அக்கம் பக்கத்தவர்கள் ஒரு மாதிரி பார்த்து வேறு மாதிரி பேசத் தொடங்கினார்கள்.

---

**''என்னதான் நீங்க சரித்திரத்தில ஈடுபாடு கொண்டவரா இருந்தாலும், உங்க பையன்களுக்கு முதலாம் ராஜேந்திரன், இரண்டாம் ராஜேந்திரன்னு பெயர் வைச்சிருப்பது, நல்லாவா இருக்கு...?''**

— ஆர். வசந்தகுமார்.



அனைவருக்கும் ஜோ முயல்லர் ஒரே பதிலைச் சொன்னார்.

''நான் நிரபராதி. என்னை வேறு யாரோ வென்று நினைத்துக் கொண்டு அவள் இத்தகைய குற்றச் சாட்டை என் மீது சுமத்துகிறாள்.''

மகளுக்கும் அதே பதில். மருமகனுக்கும் அதே பதில். மற்றவர்களுக்கும் அதே பதில். ஏன், போலீஸ் வந்து சேர்ந்த போதும் அதே பதில்.

அவர் மீது வழக்குப் பதிவாகியது. கைது செய்யப்பட்டார். நீதி மன்றத்தில் விசாரணை தொடங்கியது. அப்போதும் அதே பதில்.

மகள் தவித்தாள். தந்தை ஒரு நாஜியா? அவர் அந்தக் கொலையைச் செய்தாரா? அவரால் எப்படி இரக்கமில்லாமல் ஒரு குடும்பத்தை அப்படிச் சுட்டுக் கொல்ல முடிந்தது? வேண்டுமென்றே யாராவது இப்படி ஒரு குற்றச் சாட்டைச் சுமத்துவார்களா? அல்லது அவர் சொல்வது போல இது ஆள் மாறாட்டப் பிரமையா? — அவளால் எந்த முடிவுக்கும் வர முடியவில்லை.

அவருடைய வக்கீலின் கேள்விகள் ஆணித்தரமாக இருந்தன என்றாலும் ஜெட்னிக் தயக்கமின்றி, உறுதியான பதில்களை அளித்தாள்.

டி.வி. பேட்டியில் சொன்னவற்றை விஸ்தரித்து மேலும் விளக்கமாகப் பதில் சொன்னாள். தன்னுடைய நினைவாற்றல் குறித்து அவர் எழுப்பிய சந்தேகங்களைத் தவிடு பொடியாக்கினாள். இறுதியாகச் சொன்னாள்:

''எத்தனை ஆண்டுகள் ஆனாலும் அந்தக் கொலைகாரனை என்னால் மறக்க முடியாது. அந்த அளவுக்கு அவன் முகம் என்னுள் பதிந்து போயிருக்கிறது. அவன்... அதோ குற்றவாளிக் கூண்டில் நின்றிருக்கும் ஜோ முயல்லர்தான்.''

நீதி மன்றத்தில் கூடியிருந்த பார்வையாளர்கள் அதிர்ந்தார்கள்.

வக்கீல் கேட்டார். சில ஆண்டுகளுக்கு முன் இதே போல் ஒரு வழக்கு லண்டனில் நடைபெற்றதே, நினைவிருக்கிறதா?''

அவள் பதில் சொல்லவில்லை.

''அந்த வழக்குக்கும் நீதான் காரணம். குற்றச்சாட்டும் இதேதான். ஆனால் அந்த ஆள் விடுதலை செய்யப்பட்டு விட்டான். காரணம் ஆள் மாறாட்டம். இல்லையா?''

''இருக்கலாம். அப்போது நான் தவறான ஆளை அடையாளம் காட்டிவிட்டேன்.''

''இப்போதும் கூட அதே தவறை நீ செய்திருக்கலாம் இல்லையா?''

திடுமென்று அவளுக்கு அழுகை வந்தது. ''இல்லை. இம்முறை நான் தவறு செய்யவில்லை. என் குடும்பத்தை அழித்தவன் இவன்தான்.'' சொன்ன போது குரல் உடைந்து சிதறியது.

வக்கீல் சொன்னார்:

''உன் குடும்பம் அழிக்கப்பட்டது

உண்மை. அது உன்னில் பெரும் பாதிப்பை ஏற்படுத்தியிருக்கிறது. அதன் விளைவாக இப்படியெல்லாம் குற்றச்சாட்டுகளை அள்ளி வீசிக் கொண்டிருக்கிறாய். கிட்டத் தட்ட ஒரு மன நோயாளி மாதிரி.''

''நோ.... நோ.... நோ....'' அவள் அலறினாள். லண்டனில் அவள் செய்த தவறு. இப்போது ஜோவின் வக்கீலுக்குக் கை கொடுக்க, அந்த ஒரு வாதத்தில் குற்றச் சாட்டு அடிபட்டுப் போய் ஜோ விடுதலையடைந்தார்.

அன்றிரவு ஜெட்னிக் ஒரு தீவிரமான முடிவுடன் அவருடைய வீட்டுக்கு வந்தாள். அவரை நேருக்கு நேர் சந்தித்துக் கேட்டாள்.

''நீதானே என் குடும்பத்தினரைக் கொலை செய்தவன்?''

''இல்லை.''

''வழக்கு உனக்கு சாதகமாகப் போய் விட்டது. இனி எந்தப் பயமுமில்லை. என்னிடம் மட்டுமாவது உண்மையை ஒப்புக் கொண்டு விடு.''

தலையசைத்து மறுத்தவரின் பார்வையில் அவள் கையில் பிடித்திருந்த துப்பாக்கி பட்டு அவருள் லேசான உதறலை ஏற்படுத்தியது. அந்த நேரத்தில் அங்கே வந்த அவர் மகள் அப்படியே உறைந்தாள்.

''சொல்லு, நீதானே கொன்றாய்?''

''இல்லை. நிச்சயமாக நான் இல்லை.''

''சட்டத்தைக் கொண்டும் உன்னைத் தண்டிக்க முடியாமல் போய்விட்ட பிறகு உன்னைப் பழிவாங்க எனக்கு ஒரே ஒரு வழிதான் இருக்கிறது....''

சொல்லி முடித்தபோது துப்பாக்கியைப் பிடித்திருந்த கை இரும்பியது. தன்னைத் தானே சுட்டுக் கொண்டாள் ஜெட்னிக்.

அவள் உடல் தரையில் சரிந்த நொடியில் மகளுக்கு எல்லாமே தெளிவாகி விட்டதைப் போல இருந்தது. ஆக்ரோஷமான குரலில் கேட்டாள்.

''சொல்லுங்கள் அப்பா... இப்போதாவது உண்மையைச் சொல்லுங்கள். காரணமின்றி இப்படி ஒருத்தி தன்னைத்தானே அழித்துக் கொள்ள மாட்டாள்.''

அவர் தலை குனிந்தது. மெதுவான குரலில் சொன்னார்:

''அந்தக் குடும்பத்தை அழித்தது நான்தான். ஆனால் அது என்னுள் கிளர்ந்த கொலை வெறியால் அல்ல. அப்போது நான் ஒரு ராணுவ வீரன். என் மேலதிகாரிகளின் ஆணைக்குக் கட்டுப்பட்டு நடக்க வேண்டிய நிலையில் இருந்தவன்.''

ஒரு நொடி, பிரமித்த நிலையில் நின்றாள் மகள். பின் நிதானமான குரலில் கூறினாள்:

''இனி என் குடும்பத்தில் உங்களுக்கு இடமில்லை.''

சொல்லி விட்டுக் கதறி அழுதாள்.

சட்டம் தந்திருக்கக்கூடிய தண்டனையை விடக் கொடிய தண்டனையைப் பெற்று விட்ட துன்பத்தில் தலைகுனிந்தார் ஜோ.

— சி. ஆர். கே.

# சிகரங்களை நோக்கி

18

அந்த மலைச்சாலையில் ஓவியாவோடு ஒரு நாகரிகம் குறையாத இடைவெளியில் நடக்க நடக்கத் தூரமும் பாரமும் குறைவதாய்த் தோன்றியது திருஞானத்துக்கு.

வசந்த காலத்திற்குப் பிறந்த புதிய தளிர்கள் அவர்களைப் பற்றித் தமக்குள் ஏதோ முணுமுணுத்துக் கொண்டன; தளிர்களின் மினுமினுப்பில் வழிந்து கொண்டிருந்தது வசந்தம்.

''எனக்குப் பிடித்தது வசந்தகாலம்; உங்களுக்கு?'' என்றாள் ஓவியா.

''எனக்குப் பிடித்தது இலையுதிர்காலம்.''

''ஏன்? ஏன்?'' அவள் படபடத்தாள்.

''இலையுதிர்காலத்தில்தான் நான் எனது முகம் பார்க்கிறேன்; அது எனது பிம்பம். என்னைப் போலவே ஒரு மெல்லிய சோகம் அதில் துல்லியமாய்த் தெரிகிறது. அந்த மரங்களைப் போலவே நானும் நிர்வாண மௌனம் அனுஷ்டிக்கலாமா என்று நினைத்துக் கொள்வேன்.''

அவள் சத்தம் தேய்த்துச் சிரித்தாள்.

''நிஜந்தான்! கவிஞர்களும் காதலர்களும் சோகமானவர்கள்.''

''ஆமாம்; கவிதைக்கும் காதலுக்கும் சோகம்தான் ஆபரணம். ஒரு கஜல் சொல்லட்டுமா... கஜல்?''

''சொல்லுங்களேன்''

''அதோ பாருங்கள்!
அந்த
ஒருதலைக் காதலன்
இறந்து கிடக்கிறான்.

இறந்து கிடந்தாலும்
அவன் விழிகள்
திறந்து கிடக்கின்றன.

பாவம்!

காதலிக்காகப்
பார்த்துப் பார்த்து நின்ற
பழக்க தோஷம்.''

கவிதை சொல்லி அவள் அவன் கண்கள் பார்த்தான்.

தண்ணீரில் இருக்கும் மீன் நீர் குடிக்கிறதா, நீர் கழிக்கிறதா என்பதைக் கண்டறிய முடியாதது மாதிரி — அவள் ரசித்தாளா, நிராகரித்தாளா என்பதையும் அவள் கண்கள் காட்டிக் கொடுக்கவில்லை. பிறகு புல்வெளியில் வீழும் பூ மாதிரி அவன் மீது சொல்லெறிந்தாள்:

''இந்தக் கவிஞர்களெல்லாம் காதலிகளை விடக் காதலை அதிகமாய் நேசிக்கிறவர்கள். இந்தக் கவிதைகள் ரசிப்பதற்குத்தான்; வசிப்பதற்கல்ல.''

அவன் அவளை உணர்ச்சியில்லாமல் பார்த்தான்.

''அறிவு தலைமை தாங்கினால் விஞ்ஞானம்; உணர்ச்சி தலைமை தாங்கினால் கலை. உன்னால் எங்கள் கலைகளை விளங்கிக் கொள்ள முடியாது விஞ்ஞானி மகளே! உன்னைப் போன்ற பெண்களை நினைத்துத்தான் கவிதை செய்தான் அந்தக் காளிதாசன்.''

''என்ன கவிதை?''

''குவளை மலர்கொண்டு
செய்யப்பட்டவை உன் கண்கள்.

தாமரையால் செய்யப்பட்டதுன்
திருமுகம்.

முல்லை மொட்டுக்களால் படைக்கப்
பட்டவை உன் பற்கள்.

செண்பக மலர்களால் தொடுத்துக்
கட்டப்பட்டவை உன் தோள்கள்.

அன்று தோன்றிய மாந்தளிர்களால்
செய்யப்பட்டதுன் உதடுகள்.

ஆனால்

உன் இதயம் மட்டும்
கல்லால் செய்யப்பட்டதென்ன
கண்ணே!''

''இதுதான் என்னைப் பற்றிய கவிதையா?'' என்றாள் உதட்டடியில் புன்னகையை ஒளித்துக் கொண்டு.

அவன் இமைகள் மட்டும் 'ஆம்' என்றன.

வைரமுத்து

"இந்த ஒருதலைக் காதல் கவிதைகளில் எனக்கு உடன்பாடில்லை திருஞானம்."

"ஏன்? ஏன் உடன்பாடில்லை?"

"காதலுக்கும் மழைக்கும் விண்ணப்பம் போடுவது விவரமில்லாதவர்கள் செய்கிற வேலை — இரண்டும் கண்ணிலிருந்தும் விண்ணிலிருந்தும்தானே பொழிய வேண்டும்."

திருஞானம் சிரித்தான் — சுரப்பசை இல்லாமல்.

"உன் உவமை அழகுதான்; ஆனால் உவமை என்பது உண்மைக்குப்



பக்கத்தில் வர முடியுமே தவிர
உண்மையாகிவிட முடியாது ஓவியா!

உன்னைப் பற்றிக் காளிதாசன்
எழுதியிருப்பது மாதிரி என்னைப் பற்றி
அரபுக் கவிஞன் அபு அலி
எழுதியிருக்கிறான் — சொல்லட்டுமா?''

''சொல்லுங்கள்.''

''நான் ஒரு மண்பாண்டம்
காலம் என்னைப் பிசைந்தது;
கண்ணீர் ஊற்றிப் பிசைந்தது;
துன்பச் சக்கரத்திலிட்டுச்
சுழற்றியது.
வெயிலில் இட்டது;
தணலில் சுட்டது;
என்னை •
மண்பாண்டமாய் மாற்றி
உன் கையில் கொடுத்தது
நீ
நிரப்பப் போகிறாயா
இல்லை
உடைக்கப் போகிறாயா?''

அவன் சொன்ன கவிதை கேட்டு,
சற்று நேரம் அவள் மௌனம் பேசினாள்.

பிறகு பாலைவனத்தில் தூறல் மாதிரி சிறிதே சிரித்தாள்.

அது அந்த மண்பாண்டம் நிறையப் போதுமானதாக இல்லை!

●

இருவரும் வீடு நெருங்கிய பொழுது அந்த வெளிநாட்டுக் கார் அவர்கள் வீட்டு வாசலை அடைத்து ஆரோகணித்திருந்தது.

அவர்களின் கண்களில் வியப்பு தன் விலாசம் எழுதிவிட்டுப் போனது.

அப்படி ஒரு கார் எப்படி வந்தது?

பவனி வந்தது யாரோ?
பார்க்க வந்தது எவரையோ?

அவர்கள் ஓடிவிரைந்து உள்ளே நுழைய முயன்றபொழுது உள்ளிருந்து நிதானமாய் வெளிவந்தார்கள் இரண்டு நெட்டையர்கள்.
அந்நியர் என்பதை அடையாளம் காட்டும் முகம் —
சூரியத் தகடாய் ஜொலிக்கும் நிறம் —
எந்த இந்தியனையும் குனிந்து பார்த்துப் பேசும் உயரம் —
குன்றை மூடிய மேகமாய் — கோட்டு.
கத்தரிப் பூக்களைக் கத்திரித்து வைத்த கண்கள் —

அவர்கள் இவர்களைப் பார்த்து எந்த உணர்ச்சியும் காட்டாமல் 'ஹலோ' சொல்லிவிட்டுக் காரில் பறந்தார்கள்.

அந்த மலைச்சரிவில் கார் இறங்கும் வரை அவர்கள் கண்கள் இறங்கவில்லை.

பிறகு வீட்டுக்குள் விரைந்தார்கள்.

ஒவ்வோர் இடத்திலும் அவர்கள் கண்கள் உட்கார்ந்து எழுந்தன.

மேகம் வந்த சுவடு வானத்தில் இல்லாதது மாதிரி வெளிநாட்டார் வந்து போன சுவடு வீட்டுக்குள் இல்லை.

''அதோ! அது... அது என்ன? பிரம்பு நாற்காலிக்குக் கீழே ஒரு பிரகாசம்?''

ஓடி எடுத்தாள் ஓவியா.

கட்டி! தங்கக் கட்டி!

செவ்வக வடிவத்தில் சின்னச் சூரியன்.

எப்படி வந்தது இது?

இருவர் முகத்திலும் அதிர்ச்சியும் ஆச்சரியமும் மாறி மாறி 'டார்ச்' அடிக்க அவர்கள் நிலைபெயராமல் நின்ற பொழுது — ஒரு மெல்லிய காலடி ஓசை அவர்களின் கனத்த மௌனத்தில் கல்லெறிந்தது.

நிமிர்ந்தார்கள்.

இவர்கள் இருவரின் இருப்பையும் அறியாமல் குனிந்து எதையோ தேடிக் கொண்டே அந்தக் கூடத்துக்குள் ஊர்ந்து ஊர்ந்து வந்ததோர் உருவம்.

''தந்தை! உன் தந்தை!''

ரகசியத்தின் காதில் ரகசியம் பேசினான் திருஞானம்.

''இவரா? இவரா என் தந்தை?''

புதைபொருள் ஆராய்ச்சியில்

## அடுத்த இதழில்.....



●● கலப்படத்தைக் கண்டுபிடிப்பது எப்படி?
— கவர் ஸ்டோரி

ஆச்சரியப்பட வைக்கும் சிவகங்கைத் தொகுதி!
— ஸ்பெஷல் ரிப்போர்ட்

பொருட்களைத்தானே கண்டெடுப்பார்கள்!
மனிதர்களைக் கூடவா?

இருபத்தோராம் நூற்றாண்டு உடைக்குள்
ஒரு கற்கால மனிதனா?

என்ன கோலம் இது?

ஒட்டடை படிந்த ஓவியத்தில் முகம்
தெரியாத உருவமாய் ஏன் இந்த மாற்றம்?

அவளையே மறந்தாள்;

'அப்பா' என்று வெடித்து விளித்தாள்.

குனிந்த உருவம் நிமிர்ந்தது.

அந்தக் கண்கள் அங்கிருந்த உருவங்களை
மறந்துவிட்டு ஏதோ ஓர் உருப்படி தேடி
அலைந்தன.

ஓவியாவின் கையில் இருந்த தங்கக்
கட்டியைக் கண்டதும் அவருக்கு உயிர்
வந்தது.

''இதுதான்... இதுதான்!''
என் எண்ணிக்கையில் தவறியது
இதுதான்.''
பரபரப்போடு வந்து பறித்துக் கொண்டது.

''அப்பா!
என்னப்பா இது?
ஏது தங்கம்?
எப்படி வந்தது?''

விஞ்ஞானி தன் உதடுகளை விஷத்தில்
நனைத்துச் சிரித்தார்.

''இந்தத் தங்கம் என் அறிவுக்கு
விலை, மகளே!
என் தவத்திற்கு வரம், மகளே!

இப்போது என்னிடம் இருக்கும் பொன்னை
உருக்கினால் இந்த மலைக்கே ஒரு தங்கத்
தகடு வேய முடியும். அடைந்து
விட்டேன்; என் அறிவின் விலையை
அடைந்து விட்டேன்.''

''அது சரி!
எந்த அறிவுக்கு இந்த விலை?''

''மூன்றாம் உலகப் போர் மூண்டால்
அதை மூன்றே மணி நேரத்தில் முடித்து
வைப்பதற்கு இந்த விலை!

இந்த பூமியில் நகராத உயிர்களை
விட்டுவிட்டு நகரும் உயிர்களையெல்லாம்
நசுக்குவதற்கு இந்த விலை!

உயிர்களின் சுவாசப்பைகளில் மரணத்தை
நிரப்புவதற்கு இந்த விலை!''

அதுவரை உஷ்ணம் ஏறிக் கொண்டே வந்த
ஓவியாவின் இதயத்தில் உலை வெடித்தது.

''நிறுத்துங்கள்!

உங்கள் சுவாசமும் இந்தக் காற்று
மண்டலத்திலேதான் கட்டுண்டு கிடக்கிறது.

உலகத்திற்குச் சவப்பெட்டி செய்து விட்டு
உங்களுக்கு மட்டும் ஊஞ்சல் தயாரிக்க
முடியுமா?

இப்போது நீங்கள் பணக்காரர்.



''ராத்திரி தூக்கம் வரலேன்னா ஒண்ணு, இரண்டு, மூணுன்னு எண்ணச் சொன்னேனே, செய்தீங்களா?''

''பத்தாயிரம் வரை எண்ணினேன்.''

''அப்புறம் தூக்கம் வந்துவிட்டதாக்கும்...''

''இல்லே விடிந்து விட்டது!''

— தேனி. எஸ். மாரியப்பன்.

வேண்டுமானால் ஒன்று செய்யலாம்;
உங்கள் சவப்பெட்டிக்குத் தங்க
ஆணிகள் தயாரித்துக் கொள்ளலாம்!

விஞ்ஞானி வெகுண்டார்.
அர்த்தமில்லாமல் சத்தமிட்டார்.

''இல்லை!
என் முடிவு முடிவானது.
என் நேற்றுகள் இறந்து விட்டன.
நாளையின் பிரசவத்தில் நம்பிக்கை இல்லை.
இருக்கும் நிமிடம் எனக்கு;
இல்லை — நமக்கு.

இந்தத் தங்கப் பாளங்கள் எனக்கு
மட்டுமில்லை ஓவியா; எனக்கு
மட்டுமில்லை.

உன் பயணத்தில் நீ பாலைவனங்கள்
இல்லாத நதிக்கரை வழியாகவே
நடந்து போக வேண்டும்;

உனக்கு மேலே ஒரு குளிர்ந்த மேகம்
எப்போதும் குடைபிடிக்க வேண்டும்;

இதோ! இவை எல்லாமே உனக்கு!''

வெறி கொண்டு பேசிய விஞ்ஞானி
உள்ளே ஓடிச் சென்று ஒரு கறுப்புப் பெட்டி
கொண்டு வந்து திறந்து கவிழ்த்தார்.

தங்கம்! கூடம் முழுக்கத் தங்கம்!

தகதகக்கும் தங்கம்!

கக்கல் கக்கலாய் நொறுங்கிய
சூரியத் துண்டுகளாய்த் தரையெங்கும்
பரவிய தங்கம்!

அந்தத் தங்கத் துண்டுகள்
அதிர்ந்த ஓசையில் அபஸ்வரம் கேட்டது.

— இன்னும் செல்வேன்




# அருள்மிகு டெலிஃபோன் டிபார்ட்மெண்ட் திருப்பணி!

**சிரிக்க வையுங்கள் : சிங்கப்பூர் செல்லுங்கள் !**



''மக்கள் விழிப்பா இல்லேன்னா இப்படித்தான் ஊழல் நடக்கும்.''

''என்ன ஆச்சு?''

''அந்த அமைச்சர் போன வருஷம் மட்டும் ரெண்டு தடவை பிறந்தநாள் விழா கொண்டாடி வசூல் பண்ணிட்டாராம்...!''

— 'யானை,' போடிநாயக்கனூர்.

○ ○ ○

● மதுரை யாதவர் கல்லூரியில் பி. ஏ. (தமிழ்) மூன்றாமாண்டு பயிலும் மாணவர்கள் திங்கள் தோறும் ''திங்கள் அரங்கம்'' எனும் தலைப்பில் சிறிய அளவில் ஆய்வுக் கட்டுரை எழுதி வாசிப்பதுண்டு.

இதில் சிலர் திறமையான மாணவனிடம் ரூ. 5/- கொடுத்துக் கட்டுரையை எழுதி வாங்கி அரங்கிற்குக் கொண்டு வருகிறார்கள் எனும் புகார் எழுந்தது.

தமிழ்த்துறை உதவிப் பேராசிரியர் ஷாஜகான் கனி இச்செயலை வன்மையாகக் கண்டிப்பாரென எதிர்பார்த்திருந்தோம்.




ஆனால் அவரோ, ''இனி அம்மாணவரிடம் ரூ. 5/- கொடுத்துக் கட்டுரை வாங்கக் கூடாது. நான் நாலே முக்கால் ரூபாய்க்குத் தருகிறேன். என்னிடமே வாங்கிக் கொள்ளுங்கள்'' எனக் கூற, அரங்கில் சிரிப்பலை அடங்க வெகுநேரமாயிற்று. அத்துடன் அந்திய பழக்கமும் முடிவுற்றது.

— டி. கே. இராசசேகரன், மதுரை — 21.

○ ○ ○



அவர்: என்னங்க இது, கையிலே உண்டியல்? ஏ தா வ து நிவாரணத்துக்கு வசூலா?

இவர்: அதெல்லாம் ஒண்ணுமில்லீங்க. நெரிசலான இடத்தில் உண்டியலைக் கையிலே வைச்சுக்கிட்டுப் போனா எல்லோரும் விலகிடறாங்க. இடிபடாமல் நடக்க முடியுது!''

— அ. முஸ்தபா, தக்கோலம்.

○ ○ ○

● நடந்து கொண்டிருக்கும் ஈராக் — அமெரிக்க யுத்தம் பற்றி விவரித்த என் ஆசிரியர், 'இதன் பின் விளைவுகள் என்ன?' என்று கேட்டார். மாணவர்கள் தலைக்கு ஒன்றாகப் பலவற்றைச் சொல்லி முடித்த போது, 'இன்னும் ஒன்று உண்டு' என்றான் ஜெயபிந்தர். ஆசிரியர் சொல் என்று பணிக்க, ''சரித்திரத்தில் இன்னும் ஒரு பாடம் கூடும். உங்களுக்குக் கற்பிக்க இன்னும் ஒரு மணி வேண்டும். எங்கள் தலைவிதி வாயில் நுழையாத இன்னும் சில ஜெனரல்கள், ஊர்கள் பேர்களையும், தேதிகளையும் மனப்பாடம் செய்ய வேண்டும்' என்றான் அவன்!

— டி. என். வெங்கடேஷ், பம்பாய்.



''அந்தம் பத்திரிகை நடத்திய ஜோக் போட்டியில் ஏன் யாருமே கலந்து கொள்ள வில்லை?''

''வெற்றி பெறுபவருக்கு ஒரு வார 'வளை குடா' சுற்றுப்பயணம்னு அறிவிச்சிருந்தாங் களாம்!''

— அ. அப்துல் பரீது, திருப்பத்தூர்.

○ ○ ○

● தமிழாசிரியர் ஒரு மாணவனைக் ''குருடன் கண் பெற்றதைப் போல'' என்ற சொல்லை வைத்து ஒரு வாக்கியத்தைச் சொல்லேன்!'' என்றார். அந்த மாணவன் படிப்பில் வீக்! பதில் சொல்லத் தெரியாமல் விழித்துக் கொண்டிருக்க உடனே ஒரு குறும்பன் எழுந்து, ''நான் பரீட்சையில் பாஸ் செய்தால், குருடன் கண் பெற்றது போல மகிழ்வேன்'' என்று சொல்லிருப்பா'' என்று கூற, வகுப்பில் அனைவரும் சிரித்து விட்டனர் — அந்த மாணவன் உட்பட!

— கே. வி. சந்திரசேகர், திருப்பதி.

○ ○ ○



பாகவதரிடம் மிருதங்கக்காரர்: நீங்க ராக ஆலாபனை பண்ணும் போதே முன் வரிசையிலிருந்து ஒரு சீட்டு வந்ததே என்ன அது?

பாகவதர்: கீழ்த்தாடையில நாலு, மேல் தாடையில ரெண்டு, கடவாய்ப் பற்களில் சொத்தை இருக்காம். கிளினிக்கிற்கு வந்து பார்க்கும்படி டென்டிஸ்ட் ஒருத்தர் எழுதியிருக்கார்!

— எஸ். ஹரிஹரன், மணலிப்பட்டு.

● கோவையில் ''சேரன் டவர்ஸ்'' திறப்பு விழாவில் பாட்டுக்குப் பாட்டு நிகழ்ச்சி நடந்தது. வி. எம். எஸ். காலேஜிலிருந்து 'பாவா' என்ற மாணவர் வந்தார். பாடினார். யாருக்குமே கேட்கவில்லை. நடத்துனர் மைக்கைச் சோதனை செய்து விட்டுச்




'சரியாகத்தானே வேலை செய்கிறது? ஏன் பாட வில்லை?' எனக் கேட்டார். உடனே மாணவர், ''நான் பாடும் மௌனராகம் கேட்கவில்லையா?'' எனக் கணீரெனக் கேட்க, கைதட்டல் அரங்கத்தையே அதிர வைத்தது.

— பி. ஆர். நாகராஜன், பொள்ளாச்சி.

○ ○ ○

○ ஒரு பெண்மணி ஐந்து குழந்தைகளோடு பஸ்ஸில் பிரயாணம் செய்தாள். அவை அடித்த கும்மாளம் சொல்லி முடியாது. அவள் இறங்கும் போது டிரைவர் சொன்னார்: ''தாயே, அடுத்த முறை வரும் போது பாதிப் பேரை வீட்டிலேயே விட்டுட்டு வா!''

உடனே அப்பெண்மணி சொன்னாள்: ''அப்படித்தாங்க இப்ப வந்திருக்கேன்!''

— ஆர். பத்மாவதி, சென்னை — 62.

○ ○ ○

● என் நண்பருடைய டெலிபோனை நண்பர்களும் உறவினர்களும் தாராளமாக உபயோகப்படுத்தினர். டெலிபோன் 'பில்' அவருடைய பட்ஜெட்டைத் தாண்டி விட்டது. இதை நேராக நண்பர்களிடம் சொல்லத் தயங்கினார். கடைசியில் உண்டியல் ஒன்றை எடுத்து அதைச் சுற்றி இப்படி எழுதி ஒட்டினார்: ''அருள்மிகு டெலிபோன் டிபார்ட்மென்ட் திருப்பணி,'' பில் கட்டுவது சுலபமாகி விட்டது!

— கே. ஆர். வரதராஜன், சென்னை — 41.





• கூடா நட்பு

# தமிழகத்தின் அடுத்த முதல்வர் யார்?



● ப. நாகமணி, திருநெல்வேலி.

? கபில்தேவுக்குப் பத்மபூஷண் வழங்கியிருப்பது பற்றி?

! பத்மபூஷண், பத்மஸ்ரீயெல்லாம் நம்மவூர் கலைமாமணி போலாகி விட்டன. இன்று மலிவாகக் கிடைக்கும் விஷயம் இத்தகைய பட்டங்கள்தாம்.

● மஞ்சுதேவன், கல்கத்தா.

? விசுவநாத் ஆனந்தின் புதிய சாதனை பற்றி?

! விசுவரூப ஆனந்த்!

● அ. முஸ்தபா, தக்கோலம்.

? நீங்கள் ஃபோனைச் சுற்றி ராங் நெம்பர் விழுந்ததுண்டா?

! அவ்வப்போது ரைட் நம்பரும் விழுந்ததுண்டு!

● டி. தே. தாமரை பிரபு, குடியாத்தம்.

? 'குவைத்தை விட்டு ஈராக் வெளியேற வேண்டும்' என்று பிரதமர் சந்திரசேகர் கூறியுள்ளது குறித்து?

! இது என்ன தி. மு. க. ஆட்சிக் கலைப்பு போன்ற விவகாரமா? அது வேறு நாடு சுவாமி. ஈராக்கிய ஜனாதிபதி இவரிடம் கைகட்டிக் கொண்டு நிற்க மாட்டார்!

● ஈ. ஆர். சங்கரன், ஈரோடு.

? தமிழகத்தின் அடுத்த முதல்வர் யார்?

! இது தெரியாதாக்கும். தேர்தலில் பெரும்பான்மை பலத்தோடு வென்று சட்டசபைக்குள் புகும் கட்சியின் தலைவர்தான்!

● ஆர். மனோகர், திருச்சி.

? விலைவாசி, ஸ்கட் வேறுபாடு என்ன?

! ஸ்கட்டை வீழ்த்த ஒரு பேட்ரியாட் உள்ளது போல், விலைவாசியை வீழ்த்தும் ஏவுகணை இல்லை.

• ரூ. 20 பரிசு பெறுபவர்:

எம். முருககுமார்,
அறை எண் 36, மெயின் ஹாஸ்டல்,
ஆதித்தனார் கல்லூரி,
திருச்செந்தூர் — 628 215.

● எம். முத்தார் அகமத், பேர்ணாம்பட்டு.

? மண்டல் கமிஷன் சிபாரிசை அமுல்படுத்தப் போவதாகப் பிரதமர் சந்திரசேகர் கூறியுள்ளாரே?

! 'சொன்னால் என்ன; அவரைக் கவிழ்க்கத்தான் ராஜீவ் எந்நேரமும் தயாராயிருக்கிறாரே' என்பதால்தான் மண்டல் எதிர்ப்பாளர்கள் தீக்குளிக்க முன்வரவில்லை!

● எம். கே. வி. வேங்கடரமணன், ஸ்ரீரங்கம்.

? அரசை விலக்கியது சரியா, தவறா என்பதற்குப் பட்டிமன்றம் போன்ற விவாதங்கள் தேவைதானா?

! அதுதானே ஜனநாயகம்!

● என். ஆர். சுப்பிரமணியன், பூனாம்பாளையம்.

? 'காளிமுத்துவின் பேச்சு இலக்கியத் தரம் வாய்ந்தது' என்று மூப்பனார் ஒரு பேட்டியில் பதில் கூறியுள்ளாரே?

! மூப்பனார் சரியான இண்டல் பேர்வழிதான். காளிமுத்து மனம் வைத்தால் இலக்கியத் தரமாகவும் அவரால் பேச முடியும் என்பதைத்தான் அப்படிக் கூறியிருக்கிறார்!

● ஜி. ராஜசேகர், வளையமாபுரம்.

? போர் நடக்கும் நாடுகளில் அமைதி ஏற்பட என்ன வழி?

! மனிதர்கள் ஆயுதங்கள் மேல் வைத்



* தண்ணீர் கிடைக்குமா?



* பத்மபூஷண்



* விசுவரூபம்

ருக்கும் நம்பிக்கையைச் சக மனிதர்கள் மேல் வைத்தால் போர் என்ற பேச்சுக்கே இடமில்லையே!

● ரேவதி பிரியன், ஈரோடு.

? அமெரிக்கப் போர் விமானங்கள் இங்கு பெட்ரோல் போட வருகின்றனவே?

! 'அணிசேராக் கொள்கையை வி. பி. சிங்தான் குழி தோண்டிப் புதைத்து விட்டார்' என்று இ. காங்கிரஸின் சில்லறைத் தேவதைகள் குதிக்க; அதற்கு முன்பு ராஜீவ் காலத்திலேயே செய்யப்பட்ட ஏற்பாடு என்பது பிறகு வெளியாகி அவர்கள் அசடு வழிய; இப்போது டிராக் மாறிச் சந்திர சேகர் மீது பாய்கிறார்கள், 'போர்க்கால நிலைமை ஆதலால் தவிர்த்திருக்க வேண்டும்' என்று. சந்திரசேகரோ, 'ஆளப் போவது எட்டுநாள்; அதை எப்படி ஆண்டால் என்ன?' என்பது போல் கவலையற்று, 'புதிய ஒப்பந்தம் ஏதும் தேவையில்லை; பழைய ஒப்பந்தமே செல்லுபடியாகும்' என்று கூறிக் கொண்டிருக்கிறார்!

● பழனிச்சாமி, கோவை.

? கலைஞர் இனி எவ்வாறு நடந்து கொள்வது தமிழக மக்களுக்கு ஆறுதலாக அமையக் கூடும்?

! அது தெரியாது; ஆனால் தமிழக மக்கள் எவ்வாறு நடந்து கொள்வது கலைஞருக்கு ஆறுதலாக அமையக்கூடும் என்பது நிச்சயமாகத் தெரியும்.

● எஸ். யோகலிங்கம், சென்னை — 82.

? காவிரியில் தண்ணீர் விடக் கோரி கவர்னர் பர்னாலா பிரதமருக்குக் கடிதம் எழுதியுள்ளாரே?

! பர்னாலா கேட்டு விட்டாரல்லவா? கிடைத்து வாழ்ந்தாற் போலத்தான்! அவர்தான் பிரதமரின் வெறுப்பைச் சம்பாதித்துக் கொண்டிருக்கிறாரே!

● எம். முருககுமார், திருச்செந்தூர்.

? தமிழகத்தில் தி. மு. க. ஆட்சியைக் கலைத்ததன் மூலம் யார் முகத்தில் கரி பூசப் பட்டது?

! தி. மு. க. வுக்கு எதிராக வோட்டுப் போட்டவர்கள் உள்பட, அனைத்துத் தமிழக வாக்காளர் முகத்திலும். மக்களின் தீர்ப்பை மதிக்க மாட்டோம்; சுயநலத்துக்காகவே செயல்படுவோம் என்று அசல் பிரதமரும் டம்மி பிரதமரும் காண்பித்துக் கொண்டிருக்கிறார்கள்.

● பூவை கிருட்டிணன், கோவில்பத்து.

? நேற்று 'மக்கள் துன்பப்படுவார்கள் சாலை மறியலால்' என்று சொன்ன கருணாநிதி, இன்று தமது கட்சிக்காரர்கள் செய்யும் சாலை வன்முறைகளைக் கண்டு கொள்ளாமல் இருக்கிறாரே?

! நேற்று அவர் ஆட்சியில் இருந்தார், இன்று இல்லை. சட்டப்படி அமைதி நிலை நாட்டும் பொறுப்பு அவருடையது அல்ல. சாலை மறியல் திட்டமிடப்பட்ட வன்முறைச் சூழ்ச்சி. ஆட்சிக் கவிழ்ப்பையொட்டி ஏற்பட்ட சேதங்களோ அந்த வினாடியில் உணர்ச்சி வசப்பட்ட மக்களின் கொந்தளிப்பு. இதுபற்றி மத்தியில் ஆட்சிப் பொறுப்பில் இருப்பவர்கள்தான் சிந்தித்து இருக்க வேண்டும் — மாநில அரசைக் கவிழ்ப்பதற்கு முன்பு. அப்படியும் கூடக் கருணாநிதி 'சிறைச்சாலைக்குப் போவதைத் தவிர்த்துக் கழகப் பணியாற்றுங்கள்' என்று தொண்டர்களுக்கு அறிவுரை வழங்கித்தான் இருக்கிறார்.

● பாதுர் காதர், சென்னை — 11.

? நட்பு பற்றி நீங்கள் கூறும் கருத்து என்ன?

! ஒருவன் எப்படிப்பட்டவன் என்பது அவன் கொண்டிருக்கும் நண்பர்களின் அடிப்படையில் கணிக்கப்படுகிறான். கூடா நட்பு ஒருவனது உண்மை சொரூபத்தைக் காட்டிக் கொடுத்துவிடும். சர்வதேசப் போர்த்தளவாடத் தில்லுமுல்லு வியாபாரி கஷ்ஷோகியுடன் சல்லாபித்து விருந்து உண்பவர்கள், பிரதமரேயானாலும் சரி, ராஜீவ் ஆனாலும் சரி, சந்தேகத்துக்குரியவர்களாகி நம் மதிப்பில் தாழ்ந்து போகிறார்கள்.

* ஆறுதல் கிடைக்குமா?





* மண்டல்

நீங்கள் கேட்டவை — தராசு



• சுற்றுச் சூழல் கூடாரம்.

# சென்னையிலும் ஒரு வேடந்தாங்கல்!

சென்னை, சுற்று வட்டாரத்தில் பறவைகள் வந்து தங்குமிடம் வேடந்தாங்கல் மட்டுமே என்று இதுவரை நினைத்திருந்தால், உடனடியாக அந்தக் கருத்தை மாற்றிக் கொள்ளுங்கள்.

சென்னை நகரில் அடையாறு முகத்துவாரத்துக்கு நீரைத் தேடி வரும் அநேகப் பறவைகள், அங்கேயே தங்கி விடுகின்றன! முக்குளிப்பான், கரிமூக்கு, மாட்டுக் கொக்கு, வக்கா, குருட்டுக் கொக்கு என்று சுமார் ஐம்பதுக்கும் மேற்பட்ட பறவையினங்கள் பல்வேறு இடங்களிலிருந்து சென்னைக்கு வருகின்றன. அவை பற்றிய நிறையத் தகவல்களைத் தருவதற்கென்றே சென்னையில் உருவாகியிருக்கிறது "சக்கோ-டோம்.

உலக உருண்டை மாதிரியே, செய்து, அதைத் தரையில் பாதி அளவுக்குப் புதைத்து விட்டாற்போல் இருக்கிறது இந்தச் சுற்றுச் சூழல் கூடாரம். மரத்தைத் துளியும் பயன்படுத்தாமல், முழுக்க முழுக்க இரும்புத் தகட்டைக் கொண்டே இதனை அமைத்திருக்கிறார்கள். உள்ளே உருவாக்கியிருக்கிற மரம் கூட, செயற்கை அட்டையான 'தெர்மோகோலி'னால் ஆனது. இந்த மரத்தில் சில பறவைகளின் மாதிரி வடிவங்களைச் செய்து வைத்திருக்கிறார்கள்.

கண்களைச் சுழலவிட்டால் பறவையினத்தின் பரிணாமத்தைப் புரிந்து கொள்ளலாம். கால்கள், அலகுகள், சிறகுகள் இவற்றின் வளர்ச்சியும் பயனும்; பறவை கட்டும் கூடுகள், (தண்ணீருக்கடியிலே கூடச் சில பறவைகள் கூடு கட்டுமாம்!) இறக்கைகளை அவை அலகால் சுத்தப்படுத்தி வைத்துக் கொள்ளும் முறை; பறவையின் உணவுப் பழக்கம் — என்று ஒவ்வொரு தகவலும் ஆங்கிலத்திலும் தமிழிலும், வண்ணப் படத்தோடு காட்சியளிக்கிறது.



• உள்ளே மாணவர்களுக்கு விளக்கம்...

சி. பி. ராமசாமி அய்யர் பவுண்டேஷனின் இந்தச் சுற்றுச் சூழல் கல்வி மையம் மத்திய அரசின் நிதியுதவியுடன் உருவாக்கப்பட்டது.

நிறையப் பள்ளி மாணவர்களும், மாணவிகளும் வந்து போவதால், பதினைந்து நிமிடத்துக்குப் பறவைகள் பற்றிய ஒரு சுவாரசியமான வீடியோ படமும் காண்பிக்கிறார்கள். இயற்கைச் சூழலில் பறவைகளைக் கவனித்து அவற்றின் வாழ்க்கை முறைகளை அறிந்து கொள்வதில் குழந்தைகளை ஆர்வம் கொள்ளச் செய்கிறார்கள்.

— சித்தார்த்.



யோசனை தெரிவித்த வாசகர்:
சுகவன முருகன்,
காவேரிப்பட்டினம்.

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கி. ராஜேந்திரன். இணை ஆசிரியர்: சீதா ரவி.
முகவரி: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: நிர்வாகக் காரியாலயம்: 431543, 434157; 434190. ஆசிரியர் குழு அலுவலகம்: 434145.
ஆண்டுச் சந்தா — உள்நாடு ரூ. 130/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 300/-; விமானத் தபால் ரூ. 700/-.
ஆறு மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 65/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 150/-; விமானத் தபால் ரூ. 350/-.

# எல்.ஐ.சி.யின் புதிய பாலிசி கூறுகிறது—"அன்பே, நான் உன்னை விரும்புகிறேன்"

## ஜீவன் சரிதா

மும்மடங்கு பயன்தரும் ஒரு திட்டம்.

"நானும் என் மனைவியும் எப்போதும் மகிழ்வுடனும், பாதுகாப்புடனும் நிறைந்து வாழ்ந்திட, தேவையான அனைத்தையும் செய்வோம்! இந்த எண்ணங்களின் வடிவமே தம்பதியருக்கென எல்ஐசி. வழங்கிடும் சிறப்புப் பாலிசியாம்—ஜீவன் சரிதா திட்டம். எங்கள் இருவரின் இணைந்த ஆயுள் பாதுகாப்பு, ஓய்வுக்கால ஊதிய வசதி போன்ற பயன்களைத் தருவதுடன், எங்கள் குழந்தைகளுக்கும் கணிசமான செல்வத்திற்கு வாரிசு உரிமையும் தரும்—எல்ஐசி.யின் "ஜீவன் சரிதா" திட்டம்."

"அன்பே! உன்னை விரும்புகிறேன்" என்று கூறிடும் எல்ஐசி.யின் ஜீவன் சரிதா திட்டம் பற்றிய விரிவான விவரம் அறிய—

*உங்கள் அருகில் உள்ள எங்கள் அலுவலகத்தையோ, வளர்ச்சி அதிகாரியையோ அல்லது முகவரையோ அணுகவும்.*



**லைப் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பொரேஷன் ஆப் இந்தியா**

